# மக்ளீன்ஸ்

## உபயோகித்து அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்!

### இவ்விதம் சோதியுங்கள்



1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா?
2. இப்போது, மக்ளீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




**மக்ளீன்ஸ் பழுப்பு நிறமடைந்த பற்களை வெண்மையாக்குகிறது!**

# கல்கி

## பொருளடக்கம்

குரோதி மாசி 17 ● ● ● ● ● பிப்ரவரி 28



● "கல்கி"யில் வெளியாகும் கதைகளில்
● உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப்
● பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.







மலர் 24 ● இதழ் 31

# ஒன்றே போதும்

ஆட்சி மொழிப் பிரச்னையை நாட்டில் பெரும் பாலோர் பூரணமாகப் புரிந்துகொள்ளவில்லை என்பது நாளுக்கு நாள் நிதரிசனமாகி வருகிறது. பிரச்னையை உண்மையில் புரிந்துகொள்ளாதவர்கள் புரிந்துகொண்ட ஒருசிலரைத் 'தப்பபிப்பிராயத்தின் மீது' கிளர்ச்சியில் ஈடுபட்டவர்கள் என்று திரும்பத் திரும்பச் சொல்லி வருகிறார்கள்!

இவ்வாண்டு ஜனவரி 26ந் தேதி வரையில் இருந் தது போலவே இனியும் ஆங்கிலம் மட்டுமே மத்திய சர்க்காரின் ஆட்சி மொழியாக நீடிக்க வேண்டும் என்கிற கோரிக்கையில் எவ்விதக் குழப்பமும் இல்லை. இதுவே கிளர்ந்தெழுந்த மக்களின் கோரிக்கை. இதை நிறைவேற்றி வைப்பதொன்றே பிரச்னைக்குத் தீர்வு. ஆனால் இக்கோரிக்கையைப் புரிந்துகொள்ளாமல் — அல்லது புரிந்துகொண்டதுபோல் காட்டிக்கொள்ளாமல் மத்திய மந்திரிகளும், ராஜ்ய மந்திரிகளும், ஆசாரிய விநோபா பாவே போன்ற தேசப் பிரமுகர்களும் ஏதேதோ மாற்றுத் திட்டங்களைச் சொல்லி வருகின் றனர். எல்லோரும் ஒரு மொத்தமாக நேருஜியின் வாக்குறுதியைச் சட்டமாக்கிவிட்டால் பிரச்னை தீர்ந்து விடும் என்று தற்போது நினைக்க ஆரம்பித்திருக்கிறார்கள்.

'ஆட்சி மொழி விஷயத்தை மெஜாரிட்டி — மைனாரிட்டி பலம் கொண்டு நிர்ணயிக்கக் கூடாது. ஆட்சி மொழித் திட்டத்தால் நாட்டில் எவ்விதமான புதிய ஏற்றத் தாழ்வும் ஏற்படலாகாது. எனவே மிகவும் சொற்பமான சிறுபான்மையினர் பாதிக்கப் பட்டாலும் திட்டத்தைக் கைவிட வேண்டும். ஹிந்தி பேசாத மக்கள் அனைவரும் விரும்பினாலொழிய ஹிந்தியை ஆட்சி மொழியாக்கலாகாது' என்றே நேரு அவர்கள் கருதினர். ஆனால் அவர் இந்தக் கருத்தைச் சட்ட ரீதியில் வரையறை செய்து வெளியிடவில்லை. மக்களோடு மக்களாகப் பேசும் முறையில் அவர் மனம் விட்டு அளித்த வாக்குறுதி சட்ட பூர்வமான வாசகங் களுடன் வெளியானதல்ல. எனவே அவரது வாக் குறுதி வாசகங்களைச் சட்டரீதியில் விமரிசனம் செய்யத் தலைப்பட்டால் பலவிதமாக வியாக்கியானம் செய்ய முடியும். தற்போது அப்படிப்பட்ட மாறுபாடுகளைப் பிரத்யட்சமாகக் காண்கிறோம்.

நேரு அவர்கள் ஹிந்தியைப் பிரதான ஆட்சி மொழியாக ஏற்றுக் கொண்டார் என்றும் அதனுடன் ஆங்கிலமும் எவ்வளவு காலம் நீடிக்க வேண்டும் என் பதையே ஹிந்தி பேசாத மக்களின் விருப்பத்துக்கு விட்டார் என்றும் இப்போது மத்திய சர்க்காரால் பாஷ்யம் செய்யப்பட்டிருக்கிறது. இதற்கு ஹிந்தி பேசாத ராஜ்ய முதன் மந்திரிகள் உள்பட யாருமே ஆட்சேபம் தெரிவிக்கவில்லை.

ஹிந்தி வழங்காத பகுதிகளில் எவ்வளவு காலம் வரையில் ஆங்கிலத்தை நீடிப்பது என்பது குறித்தே நேருஜியின் வாக்குறுதிக்கு இரண்டு பாஷ்யங்கள் பிறந் திருக்கின்றன. ஹிந்தி வழங்காத பகுதிகளில் முக்கால் பாகத்தினர் விரும்பும்வரை ஆங்கிலத்தையும் நீடிக்க வேண்டும் என்று மத்திய சர்க்கார் கருதுகிறது. அதா வது ஹிந்தி பேசாத பகுதிகளில் கால் பாகத்தினர் ஹிந்தி மொழித் திட்டத்தை ஆட்சேபித்தாலும் அதனை அமுலாக்கத்தான் வேண்டும் என்பது இதன்



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி —
பாப்பா
— பாரதியார்

கருத்து. மகாராஷ்டிரம், குஜராத், பஞ்சாப், வங்காளம், ஒரிஸ்ஸா இவற்றையும் தென்ராஜ்யங்களோடு சேர்த்து ஹிந்தி வழங்காத ராஜ்யங்கள் என்று கருதினால் சர்க்கார் விரும்பும் முக்கால் பங்கு மெஜாரிட்டி எளிதில் கிடைத்து விடும். தமிழ் நாடு பூரணமாக எதிர்த்தாலும்கூட மற்ற ஹிந்தி வழங்காத ராஜ்யங்களில் சிறிய எதிர்ப்பே இருப்பின் ஹிந்தித் திட்டம் அமுலுக்கு வந்துவிடும்.

இந்த ஆபத்தை நம் ராஜ்ய முதன் மந்திரி உணர்ந்திருக்கிறார். எனவே, ஹிந்தி வழங்காத ராஜ்யங்கள் அனைத்தும் ஏற்றுக்கொண்டாலொழிய ஆங்கிலத்தைக் கூட்டு ஆட்சி மொழி என்கிற ஸ்தானத்திலிருந்து அகற்றலாகாது என்று அவர் கூறியுள்ளார். நேருஜியின் வாக்குறுதிக்கு இதுதான் தாத்பரியம் என்பது அவரது கருத்து.

நேருஜியின் வாக்குறுதியைக் குறித்து இவ்வாறு பல 'பாடாந்தரங்கள்' இருப்பதால் அதனைப் பிடித்துக் கொண்டிருப்பதில் பயனில்லை. நேரு அவர்கள் ஆட்சி மொழி விஷயத்தில் சிறந்த ஜனநாயகப் பண்பையும், பரந்த மனப்பான்மையையும் காட்டினார் என்பது உண்மையாயினும் அவரது 'வாக்குறுதி' என்ன என்பதைப் பற்றித் தற்போது தர்க்கமும், குதர்க்கமும் செய்யாமல் — அவற்றை அடிப்படையாகக் கொண்டு சட்டம் இயற்றாமல் — பிரச்னைக்கு நேரடியான தீர்வு காண வேண்டும்.

'1965 ஜனவரி 26லிருந்து ஹிந்தி பாரதத்தின் ஆட்சி மொழியாகும்' என்கிற அரசியல் சாஸனப் பகுதியை ரத்துச் செய்துவிட்டு இதுவரை நடந்த காரியக் கிரம முறையைப் பின்பற்ற வேண்டியதுதான் பிரச்னையைத் தீர்க்கும் ஒரே வழி. நேரு அவர்களின் அந்தரங்கக் கருத்துப்படி ஹிந்தியை ஆட்சிமொழியாக்குவது ஹிந்தி பேசாதவரின் முடிவையே பொறுத்தது என்பதை ஒப்புக் கொண்டால் மேற்படி சாஸன ஷரத்து அதற்கு முரணாகும். ஏனெனில் சாஸனத்தின்படி ஹிந்தி இப்போதே ஆட்சிமொழியாகி விட்டதல்லவா? இந்நிலையில் வேறு எந்தச் சட்டம் கொண்டு வந்தாலும் பயனில்லை. சாஸனத்தையும் அமுல் செய்து, அதே சமயத்தில் அதற்கு முரணாகவும் ஒரு சட்டத்தை நிறைவேற்றுவது உலக நாடுகளில் காணாத புதுமையாக இருக்கும்.

அவ்வாறெனில் இந்தத் திட்டத்தை மற்றவர்கள் ஒப்புக்கொள்வது எதனால்? அவர்களும் ஹிந்தி ஆட்சிமொழியாகி விட்டது என்பதை ஒப்புக்கொள்வதனால்தான். ஹிந்தியோடு ஆங்கிலம் எவ்வளவு காலம் நீடிக்க வேண்டும் என்று நிர்ணயிப்பது மட்டுமே இப்போது பிரச்னை என்று அவர்கள் கருதுகிறார்கள்.

'ஹிந்தி ஆட்சி மொழியாகிவிட்டது' என்பதை ஒப்புக்கொள்வதால்தான் ஆசாரிய விநோபா அவர்களும் காமராஜ் அவர்களும் இனியும் ஆங்கிலத்தை மட்டும் நீடித்தால் அது ஹிந்தியர் மீது ஆங்கிலத்தைத் திணிப்பதற்கு ஒப்பாகும் என்று கூறுகிறார்கள். பாரபட்சத்தை உண்டாக்கும் முறையில் புதிதாக ஹிந்தி மொழியைப் புகுத்துவதுதான் 'திணிப்பு' என்பதையும், நூற்றைம்பது ஆண்டுகளாக நாடு முழுவதற்கும் பொதுவாக இருந்து வரும் ஆங்கில மொழியை நீடிப்பது 'திணிப்பு' அல்ல என்பதையும் இவர்கள் காணாதது அதிசயம். ஹிந்திக்குச் சிம்மாதனம் அளித்தாகி விட்டது என்ற நிச்சயத்தில்தான் ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்களும், மற்ற ஹிந்தி வழங்காத ராஜ்ய மந்திரிகளும், வீராவேசமாக ராஜிநாமாச் செய்து அதே வேகத்தில் ராஜிநாமாவை வாபஸ் பெற்ற மத்திய மந்திரிகளும் இரு மொழித் திட்டத்தை ஆதரிக்கிறார்கள். இரு மொழித் திட்டத்தில் உள்ள இடர்ப்பாடுகளை இதுவரை ஆட்சித் தலைவர்கள் யோசித்துப் பார்க்கவேயில்லை. காரியாலயங்களில் இதனால் எவ்வளவு சூழ்ச்சிகளும் குழப்பங்களும் மனக் கசப்பும் ஏற்படும் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். மந்த கதிக்கு ஏற்கனவே பெயரெடுத்த தர்பாரில் மொழிபெயர்ப்புக்களினால் மேலும் எவ்வளவு கால தாமதமாகும் என்பதையும், மொழிபெயர்ப்பாளரின் சம்பளத்துக்காக ஆகும் செலவினங்களைப் பற்றியும் சர்க்காரோ, மற்ற பிரமுகர்களோ, பத்திரிகைகளோ சிறிதும் எண்ணிப் பாராமல் இரு மொழித் திட்டத்தை ஆதரிப்பது வருந்தத் தக்கது.

இரு மொழித் திட்டம் நடைமுறையில் நிச்சயமாக ஏற்றத் தாழ்வுகளை உண்டாக்கவே செய்யும். இரு மொழித் திட்டத்தின் கீழ் ஸர்வீஸ் கமிஷன் பரீட்சைகளில் 'மாடரேஷன்' செய்ய வேண்டியிருக்கும் என ஆட்சித் தலைவர்கள் ஒப்புக் கொள்வதொன்றே இதற்குப் போதிய சான்றாகும். 'சமத்துவம்' 'சமத்துவம்' என்று காங்கிரஸ் சர்க்கார் பிரகடனம் செய்யும் சோஷலிஸக் கொள்கைக்கு நேர் எதிர்க்கொள்கையே ஹிந்தித் திட்டம். சில தொழில்களில் சர்க்காருடன் தனியாரும் ஈடுபடலாம் என்று மாயாஜாலம் செய்தே தனியாருக்கு மேலாகச் சர்க்காருக்கு ஏகபோக்கியம் பெற்றிருப்பது போல் 'ஹிந்தியுடன் ஆங்கிலமும் இருக்கலாம்' என்று கூறியவாறே ஹிந்தி வெறியர்கள் ஹிந்திக்கு ஏகபோக்கியம் பெற்றுவிடுவார்கள்.

இவ்விதம் வெளியாகும் தருணத்தில் கூடி முடிந்திருக்கக்கூடிய முதன் மந்திரிகள் மகாநாட்டில் ஹிந்தி பேசாதவருக்குச் சாதகமானது என நினைத்து எடுக்கக் கூடிய முடிவு இரு மொழித் திட்டத்தின் நிரந்தர நீடிப்புத்தான். முதன் மந்திரிகள் இதற்கு இணங்கினாலும் மக்கள் இரு மொழித் திட்டத்தை நிச்சயமாக ஆதரிக்கவில்லை. ஆதரிக்க மறுப்பார்கள். ஆட்சி மொழி விஷயத்தில் ராஜ்ய சர்க்கார்கள் மக்களை நிச்சயமாகப் பிரதிபலிக்கவில்லை.

மும்மொழித் திட்டம் என்று ஒன்றைச் சொல்கிறார்கள். அதன்படி நாம் ஹிந்தி படிப்பதற்குப் பிரதியாக ஹிந்தியர் ஒரு தென்மொழியைப் படிக்க வேண்டும். இது அநாவசியம்; தமிழ் மொழியை உத்தரப் பிரதேச வாசிகள் படிக்கவேண்டிய அவசியமும் இல்லை. ஒருவருக்குக் குறிப்பிட்ட மொழியினால் ஏற்படும் ஒரு பயனைக் கருதி அவராகவே கற்கலாமே யன்றி, ஏட்டிக்குப் போட்டியாக வெவ்வேறு பிரிவின் மீது வெவ்வேறு மொழியைத் திணிப்பது முற்றிலும் அவசியமற்ற காரியம். இதனால் ஐக்கியம் ஏற்பட்டு

விடாது. ஏனெனில் இவ்வாறு பரஸ்பரம் பிறபகுதி மொழிகளைக் கற்காததால் இது காறும் இந்தியாவில் எந்த ஐக்கியக் குலைவும் இருக்கவில்லை. தற்போது ஐக்கியம் இல்லாததாக நினைத்து ஐக்கியத்துக்காகச் செய்யும் அறிவீனத் திட்டங்களால்தான் பேதங்கள் பெருகுகின்றன.

'ஆங்கிலம் மட்டும் நீடிப்பதால் ஹிந்தியருக்கு என்ன கஷ்டம்? இரட்டை மொழி அல்லது மும்மொழித் திட்டத்தைக் கட்டிக் கொண்டு அழவேண்டிய அவசியமென்ன?' என்பதே நம் மக்களின் நியாயமான கேள்வி. நாடு முழுவதற்கும் பொதுவான மத்திய சர்க்கார் நாடு முழுவதற்கும் பொதுவாக ஒரே விதியைத்தான் பின்பற்ற வேண்டும் என்று வலியுறுத்த நம் மக்களுக்குப் பூரண உரிமையும் உண்டு. எனவே அவர்கள் ஹிந்திக்கு ஆட்சிமொழி ஸ்தானம் அளிப்பதை அறவே எதிர்க்கிறார்கள். உள்நாட்டிலும், வெளி நாட்டிலும், கல்லூரிகளிலும், காரியாலயங்களிலும், நீதிமன்றங்களிலும், வியாபார ஸ்தலங்களிலும் சகல காரியங்களுக்கும் ஆங்கிலம் என்ற ஒரே மொழி சிறப்பாகப் பணி ஆற்றி வரும்போது அதனை நீக்குவதையோ, அதற்குத் 'துணை மொழி' என்ற இரண்டாம் பட்ச அந்தஸ்து அளிப்பதையோ தமிழகம் சற்றும் ஆதரிக்கவில்லை.

காங்கிரஸ் கட்சிக்கு அடிமைப்பட்ட முதன் மந்திரிகள் மகாநாடு எப்படியும் ஹிந்தியின் ஆட்சி அதிகாரத்தை ஒப்புக்கொண்டு விடும் என்றே சொல்லலாம். அதன்பின் எடுக்க வேண்டிய நடவடிக்கை என்ன என்பதே கேள்வி. இப்பிரச்னையில் மாணவர்கள்தான் தீரமாகவும் தீவிரமாகவும் போராடுகிறார்கள். எனினும் 'இருமொழித் திட்டம் வேண்டாம்; ஆங்கிலமென்ற ஒரே மொழிதான் வேண்டும்; சாஸனத்தின் ஆட்சி மொழிப் பிரிவை ரத்து செய்துவிட்டுப் பழைய நடைமுறையைப் பின்பற்ற வேண்டும்' என்ற போராட்டத்தை எதிர்க் கட்சிகளும் பத்திரிகைகளும்தான் மேற்கொள்ள வேண்டும். ஜனநாயகத்தில் எதிர்க் கட்சிகளுக்கும் பத்திரிகைகளுக்கும் எவ்வளவு சக்தி உண்டு என்பதை நிரூபிக்க இந்தப் போராட்டத்தை ஒரு சவாலாகக் கருதி நாம் இப் பணியில் ஈடுபட வேண்டும். இது தர்ம யுத்தம். வெற்றி சத்தியத்துக்கும் தருமத்துக்கும் நிச்சயம்.

# அபாய அறிவிப்புகள்

ரயில்வே பட்ஜெட்டுடன் காங்கிரஸ் சர்க்காரின் இவ்வருஷத்துக்குரிய வரிக் கொடுமைகள் தொடங்கி விட்டன. வரி என்று பெயரிட்டால் என்ன? டிக்கட், லக்கேஜ் கட்டண உயர்வு என்று பெயரிட்டால் என்ன?

கட்டண உயர்வு மிகவும் குறைவே என்று மந்திரி ஸ்ரீ பாட்டீல் அவர்கள் 'நியாயம்' கூறுகிறார். ஏற்கனவேயுள்ள நிலைமை என்ன என்பதை வைத்தே அதிகப்படிச் சுமையைக் கவனிக்க வேண்டும். ஜன்னி கண்டுள்ள நிலையில் மேலும் அரை டிகிரி ஜுரம் ஏறச் செய்தாலும் ஆபத்தை வரவேற்பதாகத்தான் பொருள். ஏற்றக் கிணற்றில் இரண்டு குடங்களும் மாறி மாறி ஏறி இறங்குவதுபோல் நம் நாட்டில் சர்க்கார் ஊழியர்களின் சம்பள உயர்வும், வரி உயர்வும் மாறி மாறி ஒன்று மற்றதன் விளைவாக நிகழுகின்றன எனச் சமீபத்தில் ராஜாஜி எழுதினார். அதற்கு ஓர் எடுத்துக்காட்டாக ரயில்வே பட்ஜெட் அமைந்துள்ளது. முக்கியமாக ரயில்வே ஊழியரின் சம்பள உயர்வை ஈடுகட்டவே கட்டணங்கள் உயர்த்தப்பட்டுள்ளன.

மத்திய நிதி மந்திரி அவர்களும் புது வரிகளைப்பற்றி ஆலோசித்துக் கொண்டிருப்பார். பட்ஜெட்டுக்குப் பூர்வாங்கமாக இப்போதே சில நடவடிக்கைகளை எடுத்திருக்கிறார். அந்நியச் செலாவணியில் மிச்சம்பிடிப்பதாக எண்ணிக் கொண்டு இறக்குமதிப் பண்டங்களின் மீது சகட்டுமேனியாகப் பத்துச் சதவிகிதம் அதிக வரி விதித்திருக்கிறார். இதன் பயனாக ஏற்கனவே 50 சதவிகிதம் இறக்குமதி வரியுள்ள ஆடம்பரப் பொருட்களின் மீது உள்ள வரி அறுபதாக உயரும்; அதாவது ஐந்தில் ஒரு பங்குதான் உயரும். அதே சமயத்தில் தற்போது பத்து சதவிகிதம் இறக்குமதி வரியுள்ள அத்தியாவசியப் பொருட்களின் மீதுள்ள வரி இருபதாக உயரும்; அதாவது இரு மடங்காகும். நம் நாட்டுத் தொழிற்சாலைகளில் உற்பத்தி பெருகுவதற்காக அயல் நாடுகளிலிருந்து பல பொருட்கள் இறக்குமதி செய்யப்படுகின்றன. அவற்றைக் கொண்டு நம் நாட்டில் ஏற்றுமதிப் பண்டங்கள் தயாரிக்கப்படுகின்றன. தற்போது அயல் நாட்டிலிருந்து நமது உற்பத்திக்காகத் தருவிக்கப்படும் அத்தியாவசியப் பண்டங்களின் மீது வரிச்சுமை மிகவும் அதிகரித்திருப்பதால் உற்பத்தி பாதிக்கப்படும். நமது ஏற்றுமதி பாதிக்கப்படும். நிதி மந்திரி அவர்கள் அந்நியச் செலாவணிக்காகச் செய்த ஏற்பாடு அதற்கு நேர்மாறான பலனைத் தரும்.

பாங்கு வட்டி விகிதத்தை நிதி மந்திரி உயர்த்தியிருப்பதால், அதிக வட்டி கிடைக்கும் என்று வெளிநாட்டினர் நம் நாட்டுக்கு ஒருபோதும் தங்கள் பணத்தை அனுப்பப் போவதில்லை. ஏனெனில் இந்தியாவிலிருந்து அந்நியச் செலாவணியை அவர்கள் நினைத்த போது பெற முடியாது என்பதை அவர்கள் நன்கு அறிவார்கள். எனவே நிதி மந்திரி நினைக்கும் நற்பலன் எதுவும் ஏற்படாமல், உள்நாட்டில் பாங்கிக் கடனில் உற்பத்தி செய்பவர்கள் பாதிக்கப்படுவது மட்டுமே இந்த நடவடிக்கையின் விளைவாக இருக்கும். பிரிட்டனும் அமெரிக்காவும் எடுக்கிற நடவடிக்கைகளை இந்திய நிதிமந்திரி பின்பற்றுவதால் எந்த நன்மையும் இல்லை; தீமை நிச்சயமாக உண்டாகும்.

நிதி மந்திரியின் புது நடவடிக்கைகள் அபாயத்தின் அறிகுறிதான். அசல் அபாயம் அவர் சமர்ப்பிக்கும் பட்ஜெட்டில் வரப் போகிறது.

# வெகுமதியும் தண்டனையும்

ஹிந்தி எதிர்ப்புப் போராட்டத்தை அரிய முறையில் சமாளித்த அற்புத சாதனைக்காக முதன்மந்திரி ஸ்ரீமான் பக்தவத்ஸலம் அவர்கள் ஆட்சித் தலைவர்கள் அனைவரின் பாராட்டுக்கும் பாத்திரமாகியிருக்கிறார். இதைக் கேட்கும் பலருக்கு வயிறு பற்றி எரியும். தமிழகத்தில் ஹிந்திக்கு எவ்வளவு எதிர்ப்பு உள்ளது என்பதை மத்திய சர்க்காருக்கு உணர்த்தாமல் மூடி மறைத்தவருக்கு — மாணவர்களை நயமாகக் கையாளாமல் முரட்டுத்தனமாக நடந்துகொண்டு வெடிமருந்தின் திரிக்குத் தீவைத்தவருக்குப் பாராட்டு என்றால் அதை ஒரு சோக நாடகக் கேலிக்கூத்து என்றுதான் சொல்ல வேண்டும். இருபது குழந்தைகள் உள்படச் சுமார் எழுபது பேரின் மரணத்துக்கும், நூற்றுக்கணக்கானவரின் அங்கஹீனத்துக்கும், கோடிக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள பொதுச் சொத்து நஷ்டத்துக்கும் பிற்பாடு தான் கிளர்ச்சி அடங்கியது. அப்போதும் முதன் மந்திரி அவர்களின் திறமையினால் அடங்கவில்லை. மாணவர்கள் தாங்களாகவே முன்வந்து கிளர்ச்சியை நிறுத்தியதால் அடங்கியது. எனவே முதன் மந்திரி அவர்களுக்கு எதற்குப் பாராட்டு என்பது புரியவில்லை.

மத்திய சர்க்கார் முதன் மந்திரியைப் பாராட்ட, முதன் மந்திரி அதைத் தொடர்ந்து போலீஸ் இலாகாவைப் பாராட்டி விசேஷ வெகுமதிகளும், சம்பள உயர்வுகளும் வழங்கியிருக்கிறார். போலீஸாரின் அதிக்ரமங்களைப் பற்றி நாம் குறை கூறாமல் வேண்டுமானாலும் இருக்கலாமேயன்றி, பாராட்டுக்குரியதாக அவர்கள்கூடத் தங்கள் உள்ளத்தில் எண்ணாத விஷயத்தில் என்னத்துக்குப் பாராட்டு? துப்பாக்கிப் பிரயோகங்களினால் பல உயிர்களைக் கொன்றதற்குப் பிறகு. உயிருக்கு ஆபத்து இல்லாமலே வலி மட்டும் உண்டாக்கிக் கூட்டத்தினரைக் கலைந்து போகச் செய்யும் துப்பாக்கி ரவைப் பிரயோகத்தைப் பற்றி நமது போலீஸ் விளக்கியிருக்கிறது. இந்த உபாயத்தை ஏன் போலீஸார் கிளர்ச்சியின்போது பின்பற்றவில்லை?

கடைசியில் மாணவர்கள்தான் துரதிருஷ்டசாலிகளாகிவிட்டார்கள். அவர்களின் மீது நடவடிக்கை எடுக்காமல் பெரும் போக்காக விடுவதற்குப் பதில் நூற்றுக் கணக்கானவர் மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. மற்றும் பல நூற்றுக் கணக்கானவர்கள் ஒரு வாரத்துக்கு மேல் கைதாகிக் காவலில் இருந்து விடுபட்டிருக்கின்றனர். குற்றம் செய்தே வழக்கப்பட்ட மற்ற பல கைதிகளுடன் மாணவர்களைக் காவலில் வைத்திருந்தது அவர்களின் இளம் மனத்தில் கெட்ட விளைவுகள் ஏற்படக் காரணமாயிருந்தன என்று சில அன்பர்கள் கூறுகிறார்கள். கைதாகிப் பின் விடுதலை பெற்ற சில சாது மாணவர்களின் பரிதாப நிலை பற்றியும் அவர்கள் கூறுகிறார்கள். இளைஞர்கள் தன்மானமுள்ளவர்கள். அவர்களை இவ்விதம் நடத்துவது அரசாங்கத்துக்கும் காங்கிரஸ் கட்சிக்கும் நல்லதல்ல.

## கேரள வாக்காளர்களுக்கு

## ராஜாஜியின் வேண்டுகோள்

கேரள சட்டசபைத் தேர்தல்களில் போட்டியிடும் சுதந்திரக் கட்சியின் அபேட்சகர்கள் அகில இந்தியாவுக்குமாகப் போராடுகிறார்கள். அவர்கள் பெறும் வாக்குகளின் சக்தி கேரள ராஜ்யத்துக்கு அப்பால் வெகுதூரங்களுக்குப் பரவும். அவர்களுடைய வெற்றி தற்போது தில்லியில் உள்ள சர்க்காரின் அஸ்திவாரத்தையே ஆட்டி உலுக்கும். காங்கிரஸும் அதன் கொள்கைகளும் மக்களின் ஆதரவையும் நம்பிக்கையையும் இப்போது இழந்து விட்டன என்பது அனைவருக்கும் தெரிந்த உண்மை. கேரளத்தில் சுதந்திரக் கட்சி அபேட்சகர்கள் பெறும் வாக்குகள் இந்த உண்மையை உலகறிய வெட்டவெளிச்சமாக்கும். கேரளத்தில் சிறிய அளவில் ஒன்று இரண்டுள்ள சுதந்திரக்கட்சி ஊழியர்கள் யாவரும் கட்சியின் அபிமானிகள் அநுதாபிகள் ஆகியோரின் பூரண ஒத்துழைப்பைப் பெற வேண்டும். கேரளத்தில் அபேட்சை செய்ய விரும்பியவர்களில் ஏராளமானவர்களைச் சுதந்திரக் கட்சியின் தலைமைக் குழு தேர்தலில் நிற்க அநுமதிக்கவில்லை என்பதால் தொண்டர்கள் அடைந்திருக்கக் கூடிய சிறிய ஏமாற்றங்களை அவர்கள் மறந்து, தற்போது தேர்தலில் போட்டியிடுபவர்களின் வெற்றிக்காக இதயபூர்வமாகவும், பக்தி சிரத்தையுடனும் உழைக்க வேண்டும் என்பதே என் வேண்டுகோள். காங்கிரஸ்காரர்களும் கம்யூனிஸ்டுகளும் கார்களையும் ஜீப்களையும் நம்பித் தேர்தல் நடத்தட்டும். கடவுளை நம்பும் சுதந்திரக் கட்சியினருக்கு சைக்கிள்களே போதும். தனது நல்ல பெயரை இழந்து விட்ட காங்கிரஸ் கட்சி இப்போது ஸ்ரீ காமராஜ் அவர்களின் தேர்தல் சாதுரியத்தையே நம்பியிருக்கிறது. 'கேரள நாட்டை யாரும் ஏமாற்ற முடியாது' என்ற நற்பெயரை வாக்காளர்கள் காப்பாற்றித் தருவார்களாக !

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி



# ராஜாஜியின் கருத்துக்கள்

"இயற்கை விதிகள் மனிதன் தோன்றிய போதே உடன் பிறந்தவை. அவை ஆண்டவனாலேயே விதிக்கப்பட்டவை. எனவே மற்ற எந்த விதிகளையும்விட அவற்றை அநுசரித்தேயாக வேண்டும். உலகம் முழுவதையும், எல்லா நாடுகளையும், எல்லாக் காலத்திலும் இயற்கை விதிகள் கட்டுப்படுத்தும். இவற்றுக்கு மாறாக மனிதன் செய்கிற எந்த விதியும் செல்லுபடியாகாது. மனிதன் செய்யும் எந்த விதியேனும் செல்லுபடியாகிறதெனில் அதற்குச் சக்தியும், அதிகாரமும் தருவது அதன் மூல வேராகிய இயற்கை விதிதான்."

—இவ்வாறு இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு ஸர் வில்லியம் ப்ளாக்ஸ்டோன் என்ற புகழ் பெற்ற ஆங்கில நீதி நிபுணர் எழுதினார்.

இயற்கை விதிகளை அறியவே ஸயன்ஸ் நிபுணர்கள் பாடுபடுகிறார்கள். அவர்கள் பெற்ற அறிவைக் கொண்டு மனித சமூகத்துக்கு நன்மை செய்யவே பௌதிக நுட்ப அறிஞர்கள் முயன்று வருகிறார்கள்.

ஆனால் நம்முடைய காங்கிரஸ் சர்க்காரோ இயற்கை விதிகளுக்கு விரோதமாகத் தன்னாலியன்ற அவ்வளவும் செய்து வருகிறது.

அரசியல் சாஸனத்தை நினைத்து நினைத்து மாற்றுவது போலல்ல இயற்கை விதிகள். அவற்றை எந்த மெஜாரிட்டி வோட்டினாலும் மாற்ற முடியாது. ஆனால் காங்கிரஸ் சர்க்கார் இயற்கைப் பண்புக்கு மாறான சட்டங்களை மெஜாரிட்டி பலத்தால் நிறைவேற்றி வருகிறது. சட்டம் நிறைவேறினாலும் அதன் நோக்கம் நடைமுறையில் நிறைவேறுவதில்லை. லாப வாய்ப்பு, சொத்து சுதந்திரம் ஆகிய இயற்கையான உந்தல்கள் இருந்தால்தான் உழவும் தொழிலும் வளரும். 'சோஷலிஸம்' என்கிற பெயரில் இந்த இயற்கைச் சக்திகளுக்கு விரோதமான சட்டங்களைப் பார்லிமெண்டில் நிறைவேற்றி விட்டார்கள். ஆனால் வயலிலும் தொழிற்சாலையிலும் உற்பத்தி பெருகவில்லை. அறிஞர் ப்ளாக்ஸ்டோன் கூறியது போல் எந்த மனிதச் சட்டத்தாலும் இயற்கை விதியை வெல்ல முடியவில்லை!

ஃ ஃ ஃ

ஹிந்தித் திட்டம் குறித்து எனக்கு எதிராக வாதம் செய்ய விரும்புகிறவர்கள் நான் 1928-லும், 1937-லும் என்ன சொன்னேன், என்ன செய்தேன் என்பதை அலுக்காமல் எடுத்துக் காட்டி வருகிறார்கள். இப்போது மக்களின் மீது திணிக்கப்படவிருக்கும் ஹிந்தியைப் பல ஆண்டுகளுக்கு முன்னரே படிக்குமாறு கோரினேன். எதிர்காலத்தில் மக்கள் நஷ்டத்துக்கும் கஷ்டத்துக்கும் ஆளாகக்கூடாது என்பதற்காகக் குழந்தைகள் ஹிந்தி படிக்க வேண்டும் என்று நான் முயற்சி எடுத்தது உண்மையே. நான் என்னாலியன்ற அளவு முயன்றும் மக்கள் அதை ஏற்கவில்லை. எனவே இப்போது அவர்களை அதற்குத் தண்டிக்க நான் ஒப்ப வேண்டுமா? பயங்கரமான தவறு செய்ய வேண்டாம் என்று நா ர தடை செய்வது பிழையாகிவிடுமா? ; ான் முன்பு சொன்னதும், செய்ததும் என்னுடைய இன்றைய போராட்டத்துக்கு ஆட்சேபகரமான காரணங்கள் அல்ல; அவையே இப்போது நான் கூறுவதற்குப் பெரும் ஆதாரங்களாகும். முன்பு நான் ஹிந்திப் பிரசாரத்துக்காகச் செய்த முயற்சி தோற்றுப் போனதே நான் இப்போது கூறுவதெல்லாம் சரி என்று பிரத்யட்சமாக நிரூபித்துக் காட்டியிருக்கிறது. நான் அந்தரங்கபூர்வமாகவும் பிடிவாதமாகவும் முயன்றும் தோற்றுப் போனேன். இதனாலேயே இன்று, "ஹிந்தித் திட்டத்தை விடுங்கள். அது பலிக்காது. இதனால் பேதம் தான் வளரும்" என்கிறேன்.

இந்தியராகிய நாம் எல்லோரும் ஐக்கியமாக இருப்போமாக! அந்த ஐக்கியத்துக்காகவே ஆங்கிலம் இப்போதுள்ளபடியே இருக்க வேண்டும் என்று நான் திரும்பத் திரும்பக் கூறுகிறேன். ஹிந்தித் திணிப்பு நாட்டை இரு பிளவாகப் பிளக்கும். என்னுடைய சகலத்தையும் நான் எந்த நாட்டுக்காகத் துறந்தேனோ, அந்த நாட்டின்மீது எனக்குள்ள அன்பு காரணமாக என் இறுதி மூச்சுவரை இதையே கூறிப் போராடுவேன்.

ஃ ஃ ஃ

ஹிந்தி எதிர்ப்பு இயக்கத்தைத் தொடர்ந்து, தென்னாட்டில் பல இடங்களில் நடைபெற்ற நாசகரச் செயல்களை அனைவரும் கண்டிக்கிறார்கள். கண்டிப்பது நியாயம். ஆனால் இந்த நாசகர வேலைகளுக்கு மூலகாரணம் 1942 ஆகஸ்டில் நடைபெற்ற காங்கிரஸ்காரர்களின் நாசகரச் செயல்களைப் பின்பற்றும் மனப்பான்மையே யாகும். காந்திஜியின் சம்மதமில்லாமலேயே அவருடைய சம்மதம் பெற்றதாகச் சொல்லிக் கொண்டு நாசகர வேலைகளில் ஈடுபட்டார்கள். அந்த அக்கிரமத்தின் வேகம் எளிதில் மறைந்து போகாது. எந்தத் தீவிரமான இயக்கத்திலும் நாசகர வேலை புகுந்து விடுகிறது. வருந்தத்தக்க இந்த உண்மையைக் காங்கிரஸ்காரர்கள் மறந்து விட்டுப் பேசுகிறார்கள். இதைப் பற்றி நான் பத்திரிகைக்காரர்களுக்கு, என்னிடம் அவர்கள் அறிக்கை கேட்டபோது சொல்லி வந்திருக்கிறேன். ஆனால் அவர்கள் அதைப் பத்திரிகைகளில் போடவில்லை.

# யார் பொறுப்பு ?



தமிழ்த் தாயின் புனிதப் பெயரைப் பயன்படுத்தியபடியே துயருறத்தக்க பல சம்பவங்கள் நிகழ்ந்து விட்டன. இந்தி எதிர்ப்பு இயக்கம் இவ்விதமாக வன்முறைச் செயல்களில் திசை மாறுமுன், 'யாராவது இரண்டு பேராவது உயிர்த் தியாகம் செய்தால்தான் மத்திய சர்க்காரின் மனத்தை உருக்க முடியும்' என்று கருதியவர்கள் உண்டு.

ஆனால் இன்று வரை ஒன்றல்ல, இரண்டல்ல, குறைந்தபட்சம் பத்துக் குழந்தைகள் உள்பட சுமார் நூறு பேர்கள் வரை இறந்து விட்டிருக்கிறார்கள். அரசினரின் எண்ணிக்கையே அறுபத்தாறு என்று கூறுகிறது. அவ்விதமிருந்தும் ஆட்சியாளரின் மனம் அசைந்து கொடுப்பதாய்த் தெரியவில்லை.

வன்முறைச் செயல்களுக்கு வருத்தப்பட வேண்டியதுதான் எனினும், அவை நிகழ்ந்தமைக்கு மாநில முதல் அமைச்சர் ஏதேதோ காரணங்கள் கற்பிப்பது விந்தையாக இருக்கிறது. மக்களின் உணர்ச்சியைப் புரிந்து கொள்ளாமல் தீர்க்கதரிசனமில்லாத ஹிந்தித் திணிப்புக் கொள்கையைத் தீவிரமாகக் கையாண்ட காங்கிரஸ் ஆட்சிதான் முதற் பொறுப்பை ஏற்க வேண்டும்.

ஜனாதிபதி ராதாகிருஷ்ணன் அவர்களே கூறியிருப்பது போல அரசியல் ஞானம் என்பது வருங்காலத்தில் நிகழக்கூடியவற்றை முன்கூட்டியே உணர்ந்தறிவதிலும் அவை நிகழாவண்ணம் தடுப்பதிலும் அல்லது அவை நிகழ இடங் கொடாமல் இருப்பதிலும்தான் இருக்கிறது.

தமிழகத்தில் அமைதி நிலவச் செய்யும் பெரும் பொறுப்பு முதலமைச்சருக்கு உண்டு. ஆனால் அதே நேரத்தில் தமிழக மக்களின் பிரதிநிதியாகத் தாம் விளங்குவதையும் அவர்களது மனங்களின் எதிரொலியாக இயங்க வேண்டிய பொறுப்பு தமக்கு உள்ளதையும் அவர் மறந்து விடலாகாது.

ஹிந்தி எதிர்ப்பு இயக்கக் காட்சிகள் சிலவற்றை அடுத்து வரும் பக்கங்களில் காணலாம்.

புகைப்படங்கள் : ஹிந்து: இந்தியன் எக்ஸ்பிரஸ்;
ஆல் இந்தியா பிரஸ் போட்டோ ஏஜென்ஸி.





POLICE FIRE ON UNRULY MOBS IN SEVEN CENTRES

Hooligans

நவமணி

திருப்பூர்... திருச்செங்கோடு... வெள்ளக்கோவில்...

3 ஊர்களில் மாணவர்கள் மீது போலீஸ்

துப்பாக்கிச் சூடு; 4 பேர் சாவு

ராணுவம் வரவழைக்கப்படுகிறது

குண்டு பாய்ந்து 5 பேர் படுகாயம் ★ மதுரையில் கண்ணீர் புகை ★ கோவையில் தடியடி

மாணவர் போராட்டம்

தொடர்ந்து நடக்கும்

THE INDIAN EXPRESS

SUBRAMANIAM, ALAGESAN RESIGN

தமிழகம் முழுதும் மாணவர்கள்

உண்ணாவிரதம்

மந்திரிகள் ஸ்ரீ சுப்ரமண்யம், ஸ்ரீ அளகேசன் ராஜினாமா

THE LARGEST CIRCULATED TAMIL DAILY

6 பக்கங்கள் 8 பைசா

தினமணி

DINAMANI

மொழிப் பிரச்னையில் கருத்து வேறுபாடுகாரணமாகவிலகல்

THE HINDU

INDIA'S NATIONAL NEWSPAPER

TROOPS FIRE ON RIOTING MOB IN POLLACHI

10 Killed : Hooligans Cause Extensive Damage

STUDENTS SUSPEND AGITATION

THE INDIAN E

Annamalai student dies as police fire on riotous mob



டானிக்
அருந்தும்
அவசியம்
ஏற்பட்டால்
அதற்கு
உகந்தது

# 'கெப்ளர்'மால்ட்

வியாதிகளையும், தொற்று நோய்களையும் எதிர்க்கும் சக்தியை வளர்க்க 'கெப்ளர்' மால்ட் போன்ற இனிமையான டானிக் வேறில்லை. ஷார்க் லிவர் ஆயில் மற்றும் வைடமின் 'ஏ'யும் 'டி'யும் செறிந்த 'கெப்ளர்' மால்ட் அனைவருக்கும் அனுகுணமான டானிக் காகும். குறிப்பாக, பிணியாறுபவர்களுக்குச் சாலச் சிறந்தது.



ஒரு பர்ரோஸ் வெல்கம் தயாரிப்பு.




SHBI.BW.35 TAM

# இந்தித் திணிப்பு

# இதோ

422 SOUTHERN RAILWAY GAZETTE 16th November 1964

**Targets of training in Hindi language**

13. The training of the existing staff in Hindi language should be completed by March 1966 and that of new recruits should continue as long as necessary. (Board's letter No. Hindi/60/22/1 dated 17th June 1961).

**Targets for training in Hindi typing and Hindi shorthand**

14. Training of the existing staff in Hindi typing and Hindi shorthand should be completed by March 1967, and that of new recruits should continue as long as necessary. (Board's letter No. Hindi/60/22/1 dated 17th June 1961).

**Hindi test in Railway Training Schools**

15. New entrants to Railway service should pass a simple test in Hindi before completion of their training in Railway Training Schools. Trainees whose stay at the Railway Training School is for a period upto 3 months should acquire a knowledge of Devanagari alphabets and should be able to read the 1st book of Hindi. But this need not be insisted on in case of trainees whose stay at the Training School is less than a month's duration. Trainees, whose stay at the Training School is upto 6 months should acquire an elementary knowledge of Hindi and should be able to read and write easy and simple sentences in Hindi. Trainees, whose stay at the Training School is for over six months, should be required to pass the 'Prabodh' Hindi Examination, Grade I. (Board's letter No. Hindi/54/2 dated 30th September 1955 and 19th October 1956).

**Training in Hindi Morse**

16. Training in Hindi Morse is compulsory to all newly recruited Signallers and will be imparted after one year of duty post but not later than the second year of their service. Promotion, confirmation, etc., will be conditional on their successful training in Hindi Morse. (Board's letter No. E(NG)58-TRI/83, Pt., dated 18th/20th November 1961).

**Language examination for Class I officers**

17. All directly recruited Class I officers are required to pass a Hindi test equivalent to the middle school standard during their probationary period. (Board's letter No. E(GR)57EXI-4 dated 7th June 1960).

**Provision of Hindi libraries and Reading rooms**

18. Hindi libraries and reading rooms should be provided at the headquarters offices as well as at Division/District/Regional Headquarters and other centres having a large concentration of staff. (Board's letter No. Hindi/62/8/5 dated 30th May 1962).

**தென்னிந்திய ரயில்வே கெஜட்டில்**
**ஹிந்தியை எப்படியெல்லாம் திணிக்கலாம் என்பதற்கு ●**
**இருபத்தொன்பது அம்சங்கள் அடங்கிய ●**
**உத்தரவு வெளியாகியிருக்கிறது. அவற்றில் ஒரு சில பின்வருமாறு: ●**

13, 14. 1966–1967 மார்ச் மாதத்துக்குள் முறையே இப்போதுள்ள உத்தியோகஸ்தர்களுக்கும் டைப்பிஸ்டுகளுக்கும் ஹிந்தியிலும் ஹிந்தி ஷார்ட்ஹாண்டு டைப்ரைட்டிங்கிலும் பயிற்சி முடிவடைந்துவிட வேண்டும். புதிதாகச் சேரும் டைப்பிஸ்டுகளுக்கும் உத்தியோகஸ்தர்களுக்கும் இப் பயிற்சி தேவையான கால வரம்புக்கு நீடிக்கவேண்டும்.

15. ரயில்வே சர்வீஸில் புதிதாகச் சேருபவர்கள் பயிற்சிப் பள்ளியில் பயிற்சி முடியுமுன் ஹிந்திப் பரீட்சையில் தேறவேண்டும்... ரயில்வே பயிற்சிப் பள்ளியில் ஆறு மாதங்கட்கு மேல் தங்கிப் படிப்பவர்கள் ''பிரபோத்'' ஹிந்திப் பரீட்சையில் தேறவேண்டும்.

16. புதிதாக சிக்னல்காரர்களாகச் சேருபவர்கள் அனைவருக்கும் ஹிந்தி மோர்ஸில் கட்டாயமாகப் பயிற்சி அளிக்கப்படும். வேலை நிரந்தரமாக்கப்படுவதோ அல்லது உத்தியோக உயர்வோ அவர்கள் ஹிந்தி மோர்ஸில் தேர்ச்சி பெறுவதைப் பொறுத்திருக்கிறது.

17. நேரடியாகத் தேர்வு செய்யப்பட்ட எல்லா முதல் வகுப்பு அதிகாரிகளும் நடுத்தரப் பள்ளிக்குண்டான அளவுக்கு ஹிந்திப் பரீட்சைகளில் வேலை சாசுவதமாவதற்கு முன்னமேயே தேறிவிட வேண்டும்.

இவ்வாறாகத் தென்னிந்திய ரயில்வே ஏற்பாடு செய்யும் விழாக்களுக்கு அழைப்பிதழ் அச்சிடுவதிலிருந்து ரயில் இஞ்ஜின்கள், ரயில் பெட்டிகள் இவற்றைத் தயாரித்தோரின் பெயர்ப் பலகைகள் அவற்றில் பொருத்தப்படுவது வரை சகலத்திலும் ஹிந்தியைத் திணிக்க வழி வகுக்கப்பட்டுள்ளது. ●

# தலைவலியிலிருந்து

## நல்ல, நிச்சயமான நிவாரணம்










அனஸின் இவ்வளவு சக்திவாய்ந்ததாக இருப்பதற்குக் காரணம் அது ஒரு டாக்டரின் குறிப்பைப்போன்று மருந்துகளின் சேர்க்கையாகும்—துரிதமாகவும் நிவாரணமளிக்கிறது.

1. வலியிலிருந்து துரித நிவாரணம் அளிப்பதற்கென அனஸினில் ஒரு பிரத்தியேகமான முறையில் பொருள்கள் சேர்க்கப்பட்டுள்ளன.
2. அனஸின் சாதாரணமாகத் தலைவலிக்குக் காரணமான நரம்புகளின் படபடப்பைப் போக்குகிறது.
3. அனஸின் ஜலதோஷத்திலும் இன்ப்ளுவென்ஸாவிலும் ஏற்படும் ஜுரத்தைத் தணிக்க உதவுகிறது.
4. அனஸின் உபயோகிப்பதால் வலியுடன் அடிக்கடி தோன்றும் சோர்வு நீங்கிவிடுகிறது.

*Registered Users:* GEOFFREY MANNERS & CO; LTD.

# அனஸின்

**சிறந்தது ஏனெனில் அது**

**4 வழிகளில்**

**வேலை செய்கிறது**

2 வில்லைகளுக்கு 13 பைசேதான்

# வாழ்வு சிறிது, வளர்கலை பெரிது!



## தொழில் நினைவுகள்

நாற்பது ஆண்டுகளுக்கு முன் நடந்த சம்பவம். நாடகங்கள் பார்க்கும் ஆவல் முன்னேறியிருந்த அளவுக்குப் பெண்களும் ஆண்களுடன் சரிநிகர் சமானமாக அமரலாம் என்ற எண்ணம் தீவிரமடையாத காலம். செட்டிநாட்டுப் பகுதியில் நாடகக் கொட்டகைகளில் முதல் வகுப்பு நாற்காலிகளை ஆண்கள்தான் உபயோகிக்கலாம். பெண்கள் அங்கு உட்கார அனுமதிக்கப்பட மாட்டார்கள். அவர்களுக்கு ஓர் ஓரத்தில் பாய் விரிக்கப்பட்டிருக்கும்.

அந்தக் காலத்தில் பிரபலமடைந்திருந்த டி. பி. ராஜலட்சுமி, எம். ஜி. நடராஜ பிள்ளை கோஷ்டியினர் 'சாவித்திரி' நாடகம் நடத்திக் கொண்டிருந்தார்கள். ஏகக் கூட்டம். முன் வரிசை நாற்காலியில் தலையை அள்ளி வாரி முடிந்து ஆனால் வேட்டி சட்டை அணிந்து அமர்ந்திருந்த ஓர் உருவம் பக்கத்தில் இருந்தவர்களின் கவனத்தைக் கவர்ந்ததோடல்லாமல் கசமுசவென்ற பேச்சு எழுவதற்கும் காரணமாக இருந்தது. சம்பிரதாயத்தைத் தகர்க்க யாரோ ஒரு பெண் ஆணுடையில் வந்து நாற்காலியில் அமர்ந்திருக்கிறாள் என்ற ஐயம் உருவாகியது. போதாக்குறைக்கு அந்த நபரின் கைகளில் காப்புகளும் காலகளில் கொலுசுகளும் காதுகளில் கல் பதித்த ஆபரணங்களும் இருந்தன. ஒரு பெரியவர் ஆக்ரோஷத்துடன் எழுந்து வந்து, 'இங்கு பெண்கள் உட்காரக் கூடாது. எழுந்து அப்பால் போய் உட்காரச் சொல்லுங்கள்' என்று இரைந்தார்.

நிஜமாகவே அந்த நபர் ஆண்பிள்ளைதானென்றும் நாடகங்களில் பெண் வேடம் போடுவதினால் தலை முடித்திருப்பதாகவும் கூடவந்தவர் விளக்கிய பிறகுதான் ஐயப்பாடு விலகியது.

அன்று அந்த நாற்காலிப் பிரச்னைக்கு ஆளான ஆசாமி ஸ்ரீ டி. கே. முத்துசாமி அவர்கள்தான். டி. கே. எஸ். சகோதரர்கள் நால்வரில் இரண்டாவது சகோதரர். தமிழ் நாட்டு நாடகக் கலை வளர்ச்சி பற்றி யாராவது ஆராய்ச்சி பூர்வமான வரலாற்றை எழுத முன் வருவார்களானால் அதில் ஒரு சிறந்த இடத்தைப் பெறத் தம் அநுபவத்தினாலும் ஆற்றலினாலும் தகுதி படைத்தவர்.

இன்று அவரும் ஓய்வு பெற்று நாடகத் துறையிலிருந்து ஒதுங்கி விட்டார். பழைய செட்டிநாட்டுச் சம்பிரதாயங்களும் நவீன மாறுதல்களுக்கு இடம் கொடுத்து ஓய்வு பெற்று விட்டன!

"அந்த நாளைய நாடகத் தயாரிப்பு முறைகளுக்கும் இன்றைய முறைகளுக்கும் நிறைய வித்தியாசங்கள் இருக்கின்றன. பெருகி வரும் விஞ்ஞான வசதிகள், கதைப் போக்குகள், பிரதான நடிகர்களின் மனோ பாவங்கள், பொதுமக்களின் ரசிகத் தன்மை, எல்லாமே இந்த வித்தியாச வளர்ச்சிக்குச் சாதகமாகவோ பாதகமாகவோ உதவி செய்கின்றன" என்று குறிப்பிட்ட திரு முத்துசாமி அந்த நாளைய நாடகத் தயாரிப்பு முறைகளைப் பற்றி விவரமாகவும் உணர்ச்சி வசப்பட்டும் பேசினார்.

அன்று நடிக நடிகையரின் குரல்களுக்கு மௌசு ஜாஸ்தி. குரல் என்றால் அரசியல் மேடையில் அதிர ஒலிக்கும் குரல் இல்லை. நாடக மேடையில் 'மைக்' உதவி இல்லாமல் கடைசித் தரை டிக்கட் பேர்வழியின் காதுகளை எட்டும் ஜனரஞ்சகமான சங்கீதக் குரல். தோற்றத்தை விட அவர் தோற்றுவிக்கும் இசையை மதிக்கும் காலம். என். எஸ். ராமையா என்ற பிரக்யாதி பெற்ற நடிகர் ஒருவர் இருந்தார். ஒன்னரைக் கண் பேர்வழிதான். உருவத்துக்கும் கவர்ச்சிக்கும் வெகு தூரம். ஆனால் ஆசாமி மேடையில் சத்தியவானாகத் தோன்றிப் பாட ஆரம்பித்து விட்டால் நாடக ரசிகர்கள் சொக்கிவிடுவார்கள். எத்தனை மணி நேரமானாலும் எழுந்திருக்க மனமில்லாமல் உட்கார்ந்து இசை வெள்ளத்தில் மூழ்கிவிடுவார்கள்!

எஸ். ஜி. கிட்டப்பாவின் 'வள்ளி திருமணம்', சூரிய நாராயண பாகவதரின் 'கோவலன்', கே. எஸ். அனந்தநாராயணய்யரின் 'சகுந்தலை' முதலிய நாடகங்களை ரசிகர்கள் எத்தனை தடவைகளானாலும், எத்தனை மைல்கள் நடந்து போக வேண்டியிருந்தாலும் கூடச் சலிக்காமல் பார்த்துப் பரவசமானார்கள். முன்னவர்கள் இருவரும் சங்கீத வித்வான்கள். அனந்த நாராயணய்யர் பெண் வேடத்தில் தோன்றும் சம்பாஷணை வித்வான்! 'மைக்' தோன்றாத காலம் அவை.

'பாய்ஸ் கம்பெனி' என்று குறிப்பிடப்படும் பாலகர்களைக் கொண்ட நாடக நிறுவனங்கள் இந்த நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் புராண, இதிகாசக் கதைகளை இசைக்கு முக்கியத்துவம் கொடுத்து நடித்துக் காட்ட ஆரம்பித்தன.

டி. கே. எஸ். சகோதரர்களின் குடும்பமே ஒரு கலைக் குடும்பம். அவர்களின் தந்தையார் ஸ்ரீ டி. எஸ். கண்ணுசாமி பிள்ளை சிறந்த பாடகர். ஆகவே அவர் தம் குமாரர்களை வெகு இளமையிலேயே இசைக்கு முக்கியத்துவம் அளித்த நாடகக் கலையில் ஈடுபடுத்திவிட்டார். மதுரை தத்துவ மீனலோசனி வித்துவ பால சபைதான் அவர்களுடைய ஆரம்பக் கலைப் பயிற்சிக் களம்.

ஸ்ரீ டி. கே. முத்துசாமிக்கும் பெண் வேடத்துக்கும் வெகு பொருத்தம். ஆகவே தொடர்ந்து பெண் வேடம் போட ஆரம்பித்தார். இந்த நாட்கள் போல் உதடு ஒட்டியும் ஒட்டாமலும் இரண்டொரு காதல் வார்த்தைகள் பேசி, ஒரு 'டூயட்' பாடி ஓடும் கதாநாயகி மாதிரியல்ல. பத்துப் பன்னிரண்டு வயதில் பட்டுப் புடவையும் பலவித ஆபரணங்களையும் சுமந்து எழுபது எண்பது பாடல்களைக் கொஞ்சம்கூடச் சுருதி கலையாமல், கடைசி வரிசைவரை கேட்கப் பாடி நடிப்பது என்பது பெரிய சர்க்கஸ் பண்ணுவது போலத்தான். ஒவ்வொரு தடவையும் இளைஞன் முத்துசாமி சாவித்திரியாக நடித்து உள்ளே வந்ததும் மயக்கமே போட்டு விடுமாம்.

1925ம் ஆண்டில் டி. கே. எஸ். சகோதரர்களின் தந்தையார் திருவனந்தபுரத்தில் தனியாக ஒரு நாடகக் கம்பெனியைத் தொடங்கினார். திருவனந்தபுரத்தில் தொடங்கினாலும் அதற்குப் பெயர் 'மதுரை ஸ்ரீ பால சண்முகானந்த சபா'தான். முத்தமிழுக்கும் இருப்பிடமாக விளங்கிய மதுரையம்பதியைத் தங்கள் நிறுவனங்களுடன் சேர்த்துக் கொள்வது ஓர் அதிருஷ்டமான சம்பிரதாயமாகக் கருதப்பட்டது.

இருபத்தி ஐந்து ஆண்டு காலம் தமிழ் நாட்டில் கொடி கட்டிப் பறந்த அந்த நாடக சபா இன்று கலைத் துறையில் பல சிறந்த நடிகர்களைத் தோற்றுவித்த பணியைச் செய்திருக்கிறது. கலைவாணர் என். எஸ். கே. யிலிருந்து இன்று திரை உலகில் பெயர் பெற்று விளங்கும் பல நடிகர்கள் வரையில் ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தில் இந்தக் குழுவில் நுழைந்து அநுபவம் பெற்று வெளிவந்தவர்கள்தான்.

அந்த நாட்களில் வேறு சில கம்பெனிகள் எந்தக் குறைகளால் கலைந்து போயினவோ அந்தக் குறைகளெல்லாம் தங்களால் தவிர்க்கப்படவேண்டும் என்ற லட்சியத்துடன் இந்தக் குழுவிலுள்ள பெரியோர்கள் முயற்சி செய்தார்கள். திரு முத்துசாமி சீக்கிரமே தாம் மேடையில் தோன்றுவதை நிறுத்திக்கொண்டு கம்பெனி நிர்வாகத்தில் கவனம் செலுத்தினார். அப்போதெல்லாம் நடிகர்கள் கம்பெனியின் முழு நேரச் சிப்பந்திகளல்லவா? மேடையில் தோன்றாத நேரமெல்லாம் கம்பெனி வீட்டில்தானே இருப்பார்கள்? நேரத்தை அவர்கள் வெட்டியாக்கக் கூடாது; அவர்கள் அறிவும் உலக ஞானமும் விருத்தியாக வேண்டும் என்ற நோக்கத்தில் கம்பெனி திருச்சியில் நெடுநாட்கள் முகாமிட்டிருந்த போது ஈரோட்டிலிருந்து ஆசிரியர் ஒருவரை நிரந்தரமாக வரவழைத்துப் பால நடிகர்களுக்கு ஆங்கிலமும் கணிதமும் போதிக்கச் செய்தார். தமிழ் எழுதப் படிக்கத் தெரியாத சிறுவர்களும் சிலர் இருந்ததால் அவர்களுக்குத் தமிழ் கற்பிக்கப் பண்ருட்டியிலிருந்து சுந்தரமூர்த்தி என்பவரையும் ஏற்பாடு செய்தார்.

''இந்தக் காலம் போலில்லை! எனக்கு இந்த வேடத்தில்தான் நடிக்க இயலும் என்று அன்றையச் சிறுவர்கள் சொல்ல மாட்டார்கள். ஒரு நாடகம் என்று எடுத்துக் கொண்டால் அதில் உள்ள அத்தனை பாத்திரங்களின் பாடங்களும் அத்தனை பேருக்கும் தெரியும்! ஆகவே எதிர்பாராத விதமாக ஒரு நடிகருக்கு உடல் நலக் குறைவு ஏற்பட்டால் இன்னொரு பையனை அந்த வேடம் போட்டுக் கொள்ளச் சொல்லி மேடைக்குத் தைரியமாக அனுப்பி விடுவோம். பையன்களை, படிப்படியாக, ராஜ சபையில் நடிப்பவன், தோழன், மந்திரி என்ற வகையில் படிப்படியாகப் பாத்திரங்கள் மாற்றம் செய்வதன் பேரில் அவர்களுக்கு மேடைக் கூச்சம் என்பதும் படிப்படியாகக் குறைந்து விடும்'' என்று குறிப்பிட்டார் ஸ்ரீ முத்துசாமி.

வசனங்களைப் பேசுவதில் திட்டவட்டமான சட்டம் ஏதுமில்லாமல் நல்ல கற்பனைக்கும் இடம் கொடுப்பார்கள். அவர்கள் கற்பனை, கதை வட்டத்தை விட்டு எங்காவது வெளியே போய் நின்று தொல்லை தராது.

கலைவாணர் என். எஸ். கே.யின் புகழ் இப்படித்தான் ஒரு கற்பனை மூலம் பிரசித்தமடைந்தது. புதுக்கோட்டை நாடகமொன்றில் அன்று பிரசித்தி யடைந்திருந்த கப்பையா பாகவதரின் பாட்டைச் சற்று மாற்றி அதே மெட்டில் தமாஷாகப் பாடினார். அவ்வளவுதான்! கரகோஷத்தால் கொட்டகையே அதிர்ந்தது. காலம் சென்ற எம். ஆர். சாமிநாதனும் இவர்கள் நாடகக் குழுத் தயாரிப்புத்தான்.

நடிப்பதற்குக் கூட முதல் கட்டங்களில், 'இப்படிக் கையை ஆட்டு! அப்படி நட!' என்று சொல்ல மாட்டார்களாம். சங்கரதாஸ் ஸ்வாமிகளின் வசனத்தையும் பாடல்களையும் படிக்கும்போதே அவர்களுக்கு நடிப்பு வந்துவிடும். காரணம் பாத்திரத்தின் தன்மைக்கேற்ப வசனம் இருக்குமாம். யமன் பாத்திரத்துக்கு வல்லினம் நிறைந்த உருட்டல் மிரட்டல் வசனம். சாவித்திரிக்கு மெல்லினம் நிறைந்த நளினமான பேச்சு! முதல் தடவை படிக்கும்போதே அந்தப் பாத்திரத்தின் குணம் நடிகர்களின் உள்ளத்திலே பதிந்துவிடும்!

சாத்தூரில் சந்திரகாந்தா நாடகம் நடந்து கொண்டிருந்த வேளை. துப்பறியும் கோவிந்தனாக வரவேண்டிய ராமசாமியால் திடீரென்று வர இயலவில்லை. நிர்வாகிகளுக்குத் திகைப்புத் தோன்றிய தருணம். திரு முத்துசாமி கொண்டையை இறுக்க முடிந்து கொண்டு துப்பறியும் கோவிந்தனாக மேடையில் தோன்றி ஜமாய்த்துவிட்டார். அதற்கு

முன் அந்தப் பாத்திரத்தில் தாம் தோன்ற வேண்டியிருக்கும் என்று அவர் ஒருநாளும் நினைத்தவரில்லை!

திரு முத்துசாமி நடிகர் மாத்திரமல்ல; ஒரு சிறந்த நாடகாசிரியரும் கூட. கையில் கிடைத்த ஒரு சிறு குறிப்பைத் துணையாகக் கொண்டு ஒரே வாரத்தில் 'ராஜா பர்த்ருஹரி' நாடகத்தை எழுதி முடித்தார். டி.கே. எஸ். நாடகக் குழுவுக்கு அது புகழ் தேடித் தந்த நாடகமாகும். அவர்கள் குழு 'மேனகா' திரைப் படத்தில் நடித்தபோது அதற்கான வசனங்களையும் எழுதினார். வேறு பல நாடகங்களையும் அமைத்திருக்கிறார்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன் சென்னை சங்கீத நாடக அகாடமி அவருக்குச் சிறந்த நாடகத் தயாரிப்பாளர் என்ற விருதைக் கொடுக்க முன்வந்தது. 'தாங்கள் கலைத் துறையில் என்னென்ன செய்திருக்கிறீர்கள் என்பதை இந்தப் பாரத்தில் எழுதி அனுப்புங்கள்' என்று ஒரு பாரம் வந்ததாம். முத்துசாமி அவர்களுக்கு இது என்னவோபோல் இருந்தது. இந்த விருது வேண்டாம் என்று சொல்லிவிடக்கூட அவர் தயாரானார். இந்தக் கேள்வியை அவரிடமே கேட்கலாமா? அவமரியாதைக்கு இடம் கொடுத்ததாக ஆகிவிடக் கூடாது என்ற எண்ணத்தில் பதிலை எழுதி அனுப்பிவிட்டு, விருதைப் பெறத் தம் பையனை அனுப்பிவிட்டு அந்த நேரத்தில் வெளியூர் போய்விட்டார்!

உழைப்பில் நம்பிக்கை வைக்கும் இவர் புகழைத் தேடிப் போகிறவரல்ல என்பதற்கு மற்றோர் உதாரணம் உண்டு. இவர்கள் குழு வெளியூர்களில் புகழ் பெற்றுக் கீர்த்தியுடன் கோவையிலிருந்து சென்னைக்கு வந்து கொண்டிருந்தது. சென்ட்ரல் ஸ்டேஷனில் இவர்களை வரவேற்கத் தடபுடல் ஏற்பாடு ஆகியிருந்தது. திரு முத்துஸ்வாமி பேசின் பிரிட்ஜ் ஸ்டேஷனிலேயே இறங்கி நழுவி விட்டார். இளைஞர்களான தம்பிகள் அந்தப் புகழ்ப் பொறுப்பு முழுமையையும் ஏற்றுக் கொள்ளட்டும் என்ற எண்ணம்தான்.

குழு கலைக்கப்பட்ட பிறகு மூத்த சகோதரரான திரு சங்கரன் சொந்த ஊரான நாகர்கோவிலில் போய்த் தங்கிவிட்டார். திரு முத்துசாமி இந்தத் துறையிலிருந்து ஓய்வெடுத்துக் கொண்டார். திருவாளர்கள் ஷண்முகமும் பகவதியும் சேர்ந்து இப்போது நாடகங்களில் பங்கு பெற்று வருகிறார்கள்.

''இந்தக் கலைக்கு உழைப்பு முக்கியம். அத்துடன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தி வைத்துக் கொள்ளும் சாதனையும் தேவை! ஒரு கலைஞன் சுலபமாகக் கெட்டுப் போகலாம். நடிப்புத் துறை அவனை உணர்ச்சி நிறைந்தவனாக ஆக்குகிறது. ஆனாலும் அவன் சில குறிப்பிட்ட லட்சியங்களைக் கடைப்பிடித்தானானால் நெறி பிறழாமல் இருக்கலாம்.''

''நடிப்புக் கலைஞன் தனியாக இருந்தால்தான் மதிப்பு. கட்சிச் சார்பு என்று வரும்போது அவன் மனோதர்மமே பாதிக்கப்படுகிறது. வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் என்ற பாகுபாடு எழுகிறது. கலைக்கு இந்தப் பாகுபாடு விரோதி.''

''இன்று முன்னணியில் நிற்கும் எந்த நடிகனும் 'தன்னால்தான் கலை சோபிக்கிறது; தனக்கு முன்னும் பின்னும் எவரும் இப்படி இருந்ததுமில்லை, இருக்கப் போவதுமில்லை' என்று நினைத்துவிடக் கூடாது. இந்தக் கலை பல பெரியோர்களால் சிரமப்பட்டுத் தியாகத்தின் அடிப்படையில் வளர்க்கப்பட்டது. அதன் விளைவாகத்தான் இன்றைய நடிகர்கள் பிரகாசிக்கிறார்கள். அதை அவர்கள் உணர வேண்டும். அதற்காக நாடகக் கலை வளர்ச்சியின் சரித்திரமே எழுதப்பட வேண்டும்.''

இவரது எண்ணம் எழுத்தாக நிறைவேறினால் இந்தத் துறையே அதிருஷ்டம் செய்ததாகும். 'வாழ்வு சிறிது, வளர் கலை பெரிது' என்ற லட்சியமுடைய குழுவல்லவா இவர்கள் குழு! — கோமதி சுவாமிநாதன்

**யாரோ என்று மலைக்க வேண்டாம்! மேனாட்டுப் பாணியிலும், தாய்நாட்டுப் பாணியிலும் உடையணிந்திருப்போர் டி. கே. எஸ். சகோதரர்கள்தான்.**





### அத்தியாயம் ஒன்பது

## பயில்வான் தம்பையா

"தம்பி டோய்! ஏன் அங்கேயே நிற்கணும்? இப்படி வா!" என்று கூப்பிட்ட நாயர், காலியான சிகரெட் பாக்கெட் ஒன்றை நீள வசத்தில் கிழித்துப் பிரித்து அதன் உட்புற வெள்ளைப் பகுதியில் அன்றைய பிரதான வரவு செலவு இனங்களுக்குப் 'புள்ளி' போட ஆரம்பித்தான்.

வெறிச்சோடிக் கிடந்த சாலையில் மெர்க்குரி விளக்குகளின் நீல ஒளியிலே நனைந்து தன்னந் தனியாகத் தொலை தூரத்தில் சென்று கொண்டிருந்த நச்சியின் குள்ளமான உருவத்தையே பார்த்தபடி நின்றிருந்த சபேசன் மெல்லத் திரும்பிக் கடையருகில் வந்தான். சற்று முன் டீ குடித்துக் கொண்டிருந்த நடைபாதை வாசிகள் — அந்தப் பெண்ணும் கிழவியும் உட்பட — இப்போது அங்கு இல்லை. வேறு இரண்டு ரிக்ஷாக்காரர்கள், சினிமாப் பார்த்துவிட்டு வந்த 'தெருச் சுற்றி விடலைகள்' மூவர் ஆக ஐந்து பேர்கள் தரையில் வட்டமாக உட்கார்ந்து பீடி குடித்தவாறு, தான் பார்த்த சினிமாக் கதையை ஒருவன் சொல்ல, மற்றவர்கள் வெகு சுவாரசியமாகக் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

"என்ன தம்பி, நீ இந்த ஊருக்குப் புதிசா?" என்று கேட்ட நாயர் அவனை நிமிர்ந்து பார்க்காமல் தன் கணக்கிலேயே கவனமாக இருந்தான்.

"ஆமாம், நாயர்!" என்று மெல்லச் சொன்ன சபேசன், 'இவன் மேலும் எங்கே கேள்விகள் கேட்பானோ?' என்று பயந்தபடி தலைகுனிந்து கொண்டான்.

ஆனால், அவன் பயந்தது போல் நாயர் அவனிடம் மேற்கொண்டு ஒன்றும் கேட்கவில்லை. அவனுக்குப் படுக்க இடம் கொடுக்கும்படி நச்சி வந்து சிபாரிசு செய்ததிலிருந்தே அவனைப் பற்றி எல்லாம் தெரிந்து கொண்டு விட்டான் போலும்!

எண்களை ராகம் போட்டுக் கூட்டிக் கொண்டிருந்த நாயர், கூட்டலில் திரும்பத் திரும்ப ஏதோ 'பிசிர்' அடிப்பதாகத் தோன்றவே, சலிப்படைந்தவனாய், "அட, சே!" என்றவாறு நிமிர்ந்து சபேசனை ஒரு கணம் கூர்ந்து பார்த்து விட்டு, "தம்புரானே! நீ இந்தக் கணக்கைக் கொஞ்சம் கூட்டிப் பார்க்கணும். எனக்குச் சரிப்பட்டு வரவில்லை" என்று கூறிப் பென்சிலையும் துண்டு அட்டையையும் கல்லாப் பெட்டியின்மேல் போட்டான்.

சபேசன் அவற்றை எடுத்துக் கொண்டு சாலை விளக்கடியை நோக்கி நடந்தான்.

இந்தச் சமயம், சினிமாக் கதை சொல்லுவதிலும் கேட்பதிலுமாகத் தம்மை மறந்திருந்த இளைஞர்களிடையே ஒரு பரபரப்பு ஏற்பட்டது. கையிலிருந்த பீடிகளைத் தரையில் தேய்த்து அணைத்துப் போட்டுவிட்டு அவசரமாக எழுந்து நின்றனர்.

''டோய், நம்ம வாத்தியார் வராருடா!'' என்றான் ஒரு விடலை.

''வர்றியாடா, ஜகா வாங்கிப்பிடலாம்?'' என்று இன்னொரு விடலை பின்னால் நகர்ந்தான்.

''சீ, கய்தே! அவரைப் பார்த்துட்டுப் பார்க்காத மாதிரிப் போறே, எதனாச்சும் மிஷ்டேக்கா நெனைச்சுக்கு வாருடா!'' என்று தடுத்தான் கட்டை குட்டையாயிருந்த ஒரு ரிக்ஷாக்காரன்.

''ஹூக்கும். இன்னைக்கு என் பொயப்பு நடந்தாப் போலத்தான். வாத்தியாரு வண்டி மேலே ஏறி உட்கார்ந்துகினு 'போடா'ன்னு சொல்லப் போறாரு. ஊடு கிட்டவா இருக்கு? போவணுமே, ஆய்ரம் வெள்க்கைத் தாண்டி அதுக்கு அப்பாலே நொங்கம் பாக்கம் ஏரிக்கு!'' என்று முணுமுணுத்தான் இன்னொரு ரிக்ஷாவாலா.

அதற்குள் கோட்டை ஸ்டேஷன் பக்கமிருந்து ராஜ நடை போட்டு வெகு சாவதானமாக வந்த ஓர் ஆள், ''என்னடா, மாதவன் நாயர்! க்ஷேம லாபமெல்லாம் எப்படி?'' என்று புன்முறுவலுடன் கேட்டுக்கொண்டே, பெஞ்சியில் உட்கார்ந்தான்.

அவனுக்கு வயசு சுமார் நாற்பத்தைந்து அல்லது நாற்பத்தாறு இருக்கும். கிராப்பும் இல்லாமல், மொட்டையும் இல்லாமல், கைப்பிடியிலே அகப்படாது குட்டையாக வளர்ந்த கேசம் குச்சுக் குச்சாகச் சிலுப்பிப் படர்ந்த பெரிய தலை; காய்ப்புத் தட்டிப்போன முரட்டு முகம்; குறுகலான நெற்றி; அடர்த்தியான புருவங்களுக்குக் கீழே இமைச் சதைகளில் அமுங்கிய சிறிய கண்கள்; கிழிந்து தையல் போட்ட மேலுதடு; அதைவிடப் பெரிதான கீழ் உதடு; மேலிருந்து கீழ் நோக்கி அரை வட்டமாகச் சரிந்த மெல்லிய மீசை; குவிந்த மோவாயில் குறுகக் கறித்து மீசையுடன் தொடர்புபடுத்திய இங்காங் தாடி; உறுதியான கழுத்து; உருண்டு திரண்ட தோள்கள்; பரந்த மார்பு; தொந்தி தொப்பையற்ற கனத்த சரீரம்; அதற்கேற்ற நெடிய உயரம்; கொஞ்சம் வெளுத்த மேனி; சாம்பல் நிற மோட்டாத் துணியில் தைத்த அரைக் கை புஷ்–ஷர்ட்; காக்கி நிற நீளக் கால்சராய் — இப்படி ஒரு மல்யுத்த பயில்வான்போல் தோற்றமளித்த அந்த முரட்டு மனிதனின் பேச்சுக் குரலோ, அவனுடைய உருவத்துக்குக் கொஞ்சமும் பொருந்தாத வகையில் மென்மையும், ஆழ்ந்த அமைதியும், பண்பும் கொண்டதாய் இருந்தது.

''வணக்கம், வாத்தியாரே!'' என்று ஏககாலத்தில்நான்கு குரல்கள் கேட்டன.

அவன் கம்பீரமாக நிமிர்ந்து புருவங்களை உயர்த்திப் பார்த்தான். எதிரே அந்த மூன்று இளைஞர்களும் ரிக்ஷாக்காரனும் பவ்யப் புன்னகையுடன் நிற்க, வயதான ரிக்ஷாக்காரன் மட்டும் சற்றுத் தள்ளிப் போய் மறைவாக நின்று கொண்டிருந்தான்.

''அடடே, எல்லாரும் நம்ம சிஷ்யப் பிள்ளைகள்தானா?'' என்றவாறு மெல்லச் சிரித்த முரட்டு மனிதன், ''என்னங்கடா, தம்பிகளா! என்ன இந்த நேரத்தில் இப்படி?...'' என்று இழுத்தாற்போல் கேட்டான்.

''ஒண்ணுமில்லே, வாத்தியாரே! சும்மா, போற வழியிலே ஒரு சாயா அடிச்சுட்டுப் போவலாம்னு வந்தோம்'' என்று தலையைச் சொறிந்தான் ஒருவன்.

''ஓகோ! துரைகள் சினிமாப் பார்த்துட்டு வருகிறாற் போலிருக்கிறது?'' என்று தலையாட்டிக்கொண்ட அவன், ''ம்... உங்க நாலு பேர்லே எவனாவது ஒருவன் இப்படி வந்து, நேத்திக்கு நான் கத்துக் கொடுத்தேனே, அந்தச் 'சலாம் வரிசை'யைப் போட்டுக் காட்டட்டும். பார்க்கலாம்!'' என்று உத்தரவு போடுவதுபோல் சொன்னான்.

இளைஞர்கள் நால்வரும் ஒருவரை ஒருவர் தவிப்புடன் பார்த்துக்கொண்டனர். பிறகு, ''டேய், தன்சிங்! நீ போடா!'' என்று மூன்று பேர் சேர்ந்து ஒருவனைப் பிடித்து முன்னால் தள்ளினர்.

பெட்டிக் கடைக்கு எதிரே வந்து நின்ற அந்த இளைஞன், கைகளை மடக்கிச் சுழற்றி இரண்டு தொடைகளிலும் படபடவென்று தட்டிப் புலி போல் பதுங்கிக் குனிந்து ஒரு நடன பாணியில் நின்று, மூன்று மூன்று அடிகளாக எடுத்து வைத்துச் சதுர வட்டமாக நடந்து வந்து, சடாரெனப் பின்னால் நகர்ந்து தரையைத் தொட்டுச் சலாம் போட்டுவிட்டு நிமிர்ந்தான்.

இதைக் கூர்ந்து பார்த்துக்கொண்டிருந்த 'வாத்தியா'ரின் முகத்தில் அதிருப்தி நிலவியது. ''சரி, இன்னொருவன் வரட்டும்!'' என்று உத்தரவு போட்டான் அவன்.

# க்ருஷன் ஸால்ட்ஸ்

அருந்துங்கள்

அது **மூட்டு வலியை** அகற்ற உதவுகிறது

அதன் பயன்
மிக்க 7-வழிச்
செயல்முறை
உங்கள் உடல்
நலனைத்
தக்கபடி
பாதுகாக்கிறது




நிக்கொலஸ் (N) தயாரிப்பு

[illegible], தரத்திற்கும் [illegible] பெறும் உத்தரவாதம்

BI-KS-5 TAM

---

# ஆல்போ-ஸாங்

## எல்லா வயதினருக்கும் ஒரு சிறந்த டானிக்

உங்களுடைய உடல் வளர்ச்சிக்கு ஆல்போ-ஸாங் அவசியம் தேவை. ஏனெனில் இளையோர் முதியவர்கள் எல்லோருடைய ஆரோக்கியத்திற்கும் உடல் வளர்ச்சிக்கும் தேவையான விசேஷப் பொருள்கள் ஆல்போ-ஸாங்கில் இருக்கின்றன.






ஜே. அன் ஜே. டீஷேன்
ஹைதராபாத் (டெக்கான்)



**நீதிபதி:** உன் பெயர் கருப்பண்ணன் தானே?

**குற்றவாளி:** இல்லீங்க; கடலை முத்து.

**நீதிபதி:** போனதரம் கருப்பண்ணன் என்று சொன்னியே?

**குற்றவாளி:** இந்தத் தரம் கடலை முத்துன்னு பேரை மாத்திக்கிட்டுக் கையெழுத்து போட்டதாலேதாங்க நான் மாட்டிக்கிட்டேன்!

உடனே மற்றோர் இளைஞன் வந்து அதே போல் செய்து காட்டி விட்டு ஒதுங்கி நின்றான். முன்னவனை விட இவனுடைய 'சலாம் வரிசை'யில் ஒரு விறுவிறுப்பும் அழகும் இருந்தன.

ஆனால், 'வாத்தியாரு'க்கு இதுவும் திருப்திப் படவில்லை போல் தோன்றியது. தன் சிஷ்யப் பிள்ளைகளைக் கோபமாக முறைத்துப் பார்த்து, ''பீடியும் சிகரெட்டும் குடிச்சுக்கிட்டு சினிமாக் கொட்டகையே கெதி என்று கிடக்கிற பயல்களுக்கு இதெல்லாம் எங்கே சரியாக வரும்?'' என்று எரிச்சலுடன் கூறிக் கொண்டே எழுந்து, ''இதோ, பாருங்கடா! நான் போட்டுக் காட்டுகிறேன்'' என்றவாறு சிங்கம்போல் உடம்பை ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்துப் புலியெனப் பாய்ந்து துள்ளி, அற்புதமான ஓர் அசைவுடன் சதுர் கட்டிச் சலாம் வரிசை போட்டு விட்டு வந்து கம்பீரமாக உட்கார்ந்தான். இளைஞர்கள் இதைக் கண்டு பிரமித்தனர்.

அப்போதுதான் பக்கெட்டில் கிடந்த எச்சில் கண்ணாடித் தம்ளர்களை அலம்பி வைத்து விட்டுக் கடைக்குள்ளிருந்து எழுந்து நின்ற நாயர், ''வரணும், வரணும்! எங்கே தம்பையாவை ரொம்ப நாளா காணும்?'' என்று வாயெல்லாம் பல்லாக விசாரித்தான்.

தம்பையா என்ற அந்த முரட்டு மனிதன் குறும்பாகச் சிரித்தவாறு, ''என்னடா, மாதவன்! இன்றைக்கு என்ன, நேரத்தோடேயே போட்டுக் கொண்டாயா? இல்லையானால், முந்தா நாள் இங்கு நான் வந்து போனதை இதற்குள் உன்னால் மறக்க முடியாதே!'' என்றான்.

நாயரின் முகத்தில் அசடு வழிந்தது.

சுற்று முற்றும் பார்த்த தம்பையா உடம்பைச் சாய்த்துக் கண்களைச் சிமிட்டி, ''பரவாயில்லை; இப்போ எதாவது இருக்குமா? இருந்தால் கொடு. அதற்குத்தான் இந்தப் பக்கமாக வந்தேன்'' என்றான் தணிந்த குரலில்.

நாயர் ஏதோ யோசிப்பவன் போல் காதைச் சொறிந்து கொண்டான். இந்தச் சமயம், விளக்கடியில் நின்று கணக்குப் போட்டுக் கொண்டிருந்த சபேசன் அதை முடித்தெடுத்துக் கொண்டு வந்து நாயரிடம் நீட்டினான்.

அந்தத் துண்டு அட்டையையும் பென்சிலையும் வாங்கிக் கல்லாப் பெட்டிக்குள் போட்டுவிட்டு ஒரு பக்கெட்டைச் சபேசனிடம் கொடுத்து, ''இந்தா, இதிலே கொஞ்சம் வெள்ளம் பிடிச்சாந்து வைச்சுடு'' என்றான்.

சபேசன் அந்தப் பக்கெட்டை வாங்கிக் கொண்டு கடைக்குப் பின்னால் போனான்.

''தம்பி டோய், எங்கே போறே? அங்கே குழாய் கிழாய் ஒண்ணுமில்லை. அதோ பார், அந்த வேலி ஓரமா மில்ட்டரி ஆபீஸ் தோட்டத்துக் குன்னு தரையோடு தரையாக இரும்பு மூடி போட்டு ஒரு பீச்சாங் குழாய் இருக்கும். அத்தோட மரையை மொள்ளத் திறந்து தண்ணி புடிச்சிக்கிட்டு மறுபடியும் மூடிப்பிடு. காவக்காரன் பார்க்கப் போறான்; சடுதியா வந்துடு'' என்றான் நாயர்.

சபேசன் அந்த இடத்தை நோக்கி நடந்தான். தனக்குப் படுக்க இடம் கொடுக்கச் சம்மதித்திருக்கும் கடைக்காரனுக்கு இப்படி ஏதாவது குற்றேவல்கள் செய்ய வேண்டும் என்று அவன் ஏற்கனவே நினைத்திருந்தான். அதனால் நாயர் தண்ணீர் பிடித்து வரச் சொன்னது அவனுக்கு மகிழ்ச்சிகரமான காரியமாகவே இருந்தது. 'எவரிடம் எந்த உதவி பெறுவதானாலும் அதற்கு நம்மால் செய்யக் கூடிய ஏதாவது பிரதியுபகாரம் செய்துவிட வேண்டும்' என்று சிறு வயதில் அவனுடைய தாய் சொல்லிக் கொடுத்தது அவன் மனத்தில் ஆழப் பதிந்திருந்தது. ஆனால், 'இந்தப் பெட்டிக்கடை சாத்தத் தினமும் இரவு இரண்டு மணியாகும் போலிருக்கிறதே! அதுவரையில் நானும்

அல்லவா தூங்காமல் விழித்துக்கொண் டிருந்தாக வேண்டும்?' என்று நினைத்த போதுதான் அவனுக்குக் கவலையும் துயரமும் பொங்கிக் கண்களைக் குள மாக்கின. மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, இருள் மண்டிக் கிடந்த வேலியோரத்தே அந்தப் பிச்சாங் குமாய் இருக்குமிடத்தைக் கண்டு பிடிப்பதில் முனையலானான்.

"இந்தப் பையன் யாரு தெரியுமா, தம்பையா? உன்னோட சிஷ்யன் நச்சி இருக்கிறானே, அவன்தான் இவனை அழைச்சுக் கொண்டாந்து விட்டுட்டுப் போயிருக்கிறான், படுக்க இடம் கொடுக் கச் சொல்லி!" என்றவாறு ஒரு கண் ணாடித் தம்ளரில் ஏதோ ஒன்றை ஊற் றிக் கொடுத்தான் நாயர். அது டீ நிறத்தில் இல்லை!

ஆவலுடன் அதை வாங்கி மளமள வெனக் குடித்துவிட்டுத் தம்ளரைப் பலகைமேல் 'டக்'கென்று வைத்த தம்பையா, ஏதோ புது உற்சாக மடைந்தவன்போல் தலையைச் சுழற்றிக் கமறல் எடுத்த தொண்டையைக் கனைத்து விட்டுக்கொண்டு நிமிர்ந்து, "யாரு, நச்சியா? அவனைத் தேடிக் கொண்டுதானே நான் இந்தப் பக்கம் வந்தேன்!" என்றவாறு கடையின் கூரைச் சரிவில் தொங்கிய வாழைப் பழச் சீப்பிலிருந்து இரண்டு பழங்களைத் திருகி எடுத்து உரித்து ஒரே வாயில் போட்டு விழுங்கினான்.

"இப்பத்தான் வாத்தியாரே, நாங்க அவனை ரோட்டு மேலே பார்த்தோம். ஆளு ரொம்பத் தொங்கிப் போய்ப் போறான்" என்றான் ஒரு விடலை.

'அப்படியா?' என்பதுபோல் தலை யாட்டிக்கொண்ட தம்பையா சிறிது நேரம் ஏதோ யோசனையிலிருந்துவிட்டு நிமிர்ந்து, "அந்தப் பையனை நினைத் தால் எனக்குப் பரிதாபமாகவும் இருக் கிறது, கோபமும் வருகிறது. நாலைந்து நாட்களாக அவன் வீட்டுப் பக்கமே தலை காட்ட வில்லையாம். அவனுடைய ஆத்தாக்காரி கன்னியம்மாவும், பெண் ணும் இரண்டு மூன்று வேளை பச்சைப் பட்டினி. மாட்டுக்குத் தீவனம் வைக் காமல் மடி வற்றிப் போய் அதுவும் அவர்களோடு கிடந்து வதைகிறது. இன்று காலை விடிந்ததும் விடியாதது மாக அவள் என்னிடம் வந்து இதை யெல்லாம் சொல்லி 'ஓ'வென்று கதறி ஒப்பாரி வைத்தாள். அதனால்தான் அவனைத் தேடிப் பிடித்துக் கன்னத்தில் ரெண்டு அறை வைத்துத் துரத்த லாம் என்று சாயரட்சையிலிருந்து அலைகிறேன்; இல்லாடிப் பயல் என் கண்ணிலேயே அகப்பட மாட்டேன் என்கிறான்" என்றவாறு பெஞ்சின் மேல் மெல்ல ஒரு தட்டுத் தட்டினான். அந்தத் தட்டுக்கே அதன் பலகை விறல் கண்டு வெடித்தது!

"இல்லே, தம்பையா! இப்போ அவன் நேரே அவனோட இல்லத்துக்குத் தான் போகணும். போகலேன்னா இன் னைக்கு இங்கல்லோ படுக்கை விரிக்க ணும்?" என்று மெல்லச் சிரித்துச் சொன்ன நாயர், "ஆமாம்; உனக்கு ஏன் அவன்பேரில் இத்தனை அக்கறை? ரொம்ப நாளாவே இதை ஞான் கேட்கணும்னு இருந்துச்சு!" என்றான்.

தம்பையாவிடம் பல பேர் பல சமயம் இந்தக் கேள்வியைக் கேட்டிருக் கிறார்கள். அப்போதெல்லாம் அவன் அநேகமாக இதற்குப் பதில் சொல்வது கிடையாது. 'உனக்கு ஏன் இந்த அநாவசியக் கேள்வி?' என்று முரட்டுத் தனமாகக் கூறி விடுவான். அதற்கு மேல் அவனிடம் கேள்வி போட யாரும் துணிய மாட்டார்கள். ஆனால், சென்ற சில நிமிடங்களாக அவனுள் ஏதோ ஒரு புத்துணர்ச்சி தலைதூக்கி, எதைப் பற்றியாவது குஷியாகப் பேச வேண்டும் என்ற இருப்பு கனன்று கொண்டிருக் கவே, அவன் பதில் சொல்லத் தயாரா கிறவன்போல் அமர்த்தலாக நிமிர்ந்து உட்கார்ந்தான். நாயரும் அவனுடைய 'நிலைமை'யை அறிந்துதான் அந்தக் கேள்வியை 'நைஸாக' விட்டான்.

"ஏண்டா, நாயர்! நீ என்ன கேட்டே? அந்தப் பயல் நச்சியின்மேல் நான் ஏன் இத்தனை அக்கறை காட்டு கிறேன் என்று கேட்டாய் அல்லவா? அதை அறிய வேண்டுமானால், அதற்கு முன் ஒரு கதையைக் கேட்க வேண்டும்; கேட்கிறாயா?" என்று உற்சாகமாகப் பேச ஆரம்பித்த தம்பையா, "டேய், பசங்களா! நீங்களும் கேளுங்கடா!" என்று தன் எதிரே நின்ற சிஷ்யப் பிள்ளைகளைப் பார்த்துச் சொல்லிவிட்டு ஒரு கோலி சோடாவை எடுத்துப் படீரென்று திறந்து குடித்தான்.

'இவ்வளவுக்கும் காசு வருமா?' என்ற திகிலுடன் அவனைப் பரிதாப மாகப் பார்த்தான் நாயர்.

ஒரு நெடியான நாற்றத்துடன் வெடித்துக்கொண்டு கிளம்பிய ஏப் பத்தை விட்டுவிட்டு நிமிர்ந்த தம்பையா கண்களை இடுக்கிக்கொண்டு தலையை ஒரு விதமான தாளகதியில் ஆட்டியவாறே, "கேளுங்கடா!" என்று ஓர் அதட்டல் போட்டுவிட்டு

நிதானமாகச் சொல்ல ஆரம்பித்தான். சற்று முன்வரை அவன் பேசிய மொழி ஓரளவு நல்ல விதமாகவே இருந்தது மாறி. இப்போது அவனுடைய சீடர்களின் பாஷைக்குத் திரும்பியது :

''ஆமாங்கடா ! இருபத்து நாலு, இருபத்தைஞ்சு வருஷங்களுக்கு முன்னாலே நடந்த கதை இது. அப்போ வார் டைம். ஜெர்மன்காரனும் பிரிட்டிஷ்காரனும் முட்டிக்கிட்டான்களே, அந்த ரெண்டாவது உலக மகாயுத்தம் நடந்த சமயம். ஜெர்மன்காரன், இத்தாலிக்காரன், ஜப்பான்காரன் — இவன்கள் மூணு பேரும் ஒரு கை ; பிரிட்டிஷ்காரன், ரஷ்யாக்காரன், அமெரிக்காக்காரன், பிரெஞ்சுக்காரன்— இவன்கள் நாலு பேரும் ஒரு கை. ரெண்டு சைடிலேயும் சரியான ஜோடியாத்தான் நின்னான்கள். பார்க்கணுமே சண்டையை ! முதலில் இட்லர்தான் பூந்து விளாசினான். எல்லாம் 'ஃபௌல்' அடிதான்! நம்ம கிங்காங் மாதிரி 'காச்சா, மூச்சா'ன்னு அடிச்சான். இத்தாலிக்காரன் முஸோலினி, அவனுக்குத் தம்பி அங்கதன் ! அவனும் மாறுவாரியா விளாசினான். பிரிட்டிஷ்காரன் இன்னா கொக்கா? மத்த மூணு தோஸ்துகளோடும் சேர்ந்து, நம்ம தாராசிங் மாதிரி அங்கங்கே ரெண்டுப் பிடி போட்டு நரம்புக்கு நரம்பு அடிச்சான். ஆங் பட்டா, இட்லர் வசமா மாட்டிக்கிட்டான்! இது இப்படியாயிருக்க, இந்தண்டைப் பக்கம் ஜப்பான்காரன் இன்னா பண்ணினான் தெரியுமா ? பர்மா, சிங்கப்பூரு, மலாயா எல்லாத்தையும் கபகபன்னு தட்ட ஆரம்பிச்சான்: ஒண்ணு பின்னாலே ஒண்ணு சுருண்டு சுருண்டு வீய்ந்து போச்சு. அடுத்தபடியா கபால்னு இந்தியா மேலே பாயப் பார்த்தான். இம்பால், டாமு என்கிற ஊர்களையெல்லாம் சுருட்டிக்கிட்டு இன்னும் மேலே ஏறப் பார்த்தான். அப்போ இங்கே பிரிட்டிஷ்காரன் கொடி போட்டுக்கிட்டுக் குந்தியிருந்தானில்லையா? அவன் பெரிய ஆளு. எங்கெங்கோ இருந்த துருப்புக்களையெல்லாம் ஜமா சேர்த்துக் கொண்டாந்து இந்தியாவிலே கொட்டிப்பிட்டு, ஜப்பான்காரனைக் காலை வாரி அடிக்கச் சமயம் பார்த்துக்கிட்டு இருந்தான். அவன்தான் நுழை நரியாச்சே !.... அப்போ பார்க்கணுமே இந்த ஐலாண்டு மைதானத்தை; ஒரே மிலிட்டரி கொட்டாய்ங்கதான்! வெள்ளைக்காரன், பிரஞ்சுக்காரன், அமெரிக்காக்காரன், ஆப்பிரிக்காக்காரன் — இப்படிப் பல தேசத்து சோல்ஜர்களும் இங்கே இறங்கியிருந்தான்கள். இவன்களிலே அமெரிக்காக்காரனும் ஆப்பிரிக்காக்காரனும்தான் ரொம்ப நல்லவன்கள்; குழந்தைங்க மாதிரி! அது கெடக்கட்டும். இப்ப இன்னா சொன்னேன்?.... ஆமாம்; ஒரு நாள் திடீர்னு நம்ம பீச்சு ஸ்டேஷன் இல்லே, அதுக்கு ஓரமா ஒரு குண்டைக் கொண்டாந்து டமால்னு போட்டுப்பிட்டு ஓடிப் போயிட்டான் ஜப்பான்காரன். ஊரே கெதி கலங்கிப் போச்சு. அன்னைக்கு வெள்ளம் வேறே. பட்டணத்து ஜனங்கள் 'துண்டைக் காணோம், துணியைக் காணோம்'னு பட்டிக்காடுங்களுக்கு ஓட்டம் எடுத்தாங்க....''

கதை சுவாரசியத்தில் தன்னை மறந்திருந்த ஒரு விடலை, ''அப்பமன்னா, நீகூட ஓடிப்பிட்டியா வாத்தியாரே ?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டான்.

''ஏண்டா, டேய்! என்னை இன்னான்னுடா நெனைச்சுக்கிட்டே? இந்தச் சிங்கமா ஓடும்? டோஜோ இல்லே, முஸோலினி இல்லே, இட்லரே வந்தாக்கூட ஒரு கை பார்த்துப்பிடலாம்னு இங்கேதாண்டா இருந்தேன்!'' என்று அடித் தொண்டையில் கூறியவாறு தோளைத் தட்டிக்கொண்டு எழுந்தான் தம்பையா.

''கோபிச்சுக்காதே, தம்பையா ! அவன் கிடக்கிறான் பிஞ்சுப் பயல்; நீ சொல்லு!'' என்று அவனைச் சமாதானப்படுத்தி உட்காரவைத்தான் நாயர்.

கடையிலிருந்து இன்னொரு சோடா எடுத்துக் குடித்துவிட்டு உற்சாகமாக நிமிர்ந்து பேச ஆரம்பித்தான் தம்பையா : ''இப்படி ஓடிப் போன ஜனங்களெல்லாம் கொஞ்சங் கொஞ்சமாப் பட்டணத்துக்குத் திரும்பி வந்தாங்க. அவங்களோடு சிலர் புதுசாகவும் வந்து சேர்ந்தாங்க. அப்படி வந்தவங்களிலே நம்ம கன்னியம்மாவும் ஒருத்தி. அவளோட அப்பன் வேலாண்டி நாய்க்கன் என் அப்பாருகிட்டே படிச்சவன். அதனாலே எனக்கு அவன் குடும்பத்தைப் பத்தித் தெரியும். எங்க வீட்டுக்கு மூணாவது வீட்டிலேதான் அவனும் குடித்தனம் இருந்தான். கன்னிம்மாவை நீங்க பார்த்திருக்கிறீங்களா? இப்போ கெழவியாகிப்பிட்டாள்; அப்போ பதினாறு வயசுப் பொண்ணு. கறுப்பாயிருந்தாலும் பார்க்க ரொம்ப ஷோக்காயிருப்பாள். ஆனால் கஷ்டகாலம் யாரை விடும்?'' என்று அங்கலாய்த்தபடி கூறி நிறுத்தினான் தம்பையா. (தொடரும்)

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 17. "பழம் நீ!"

அசுரரின் கதையைக் கேட்குமுன் அமுதக் கதையொன்றினையும் நாம் கேட்டுவிடுவோம். இந்தக் கதை ஏன் இதுகாறும் வரவில்லை என்று பல அன்பர்கள் ஆவலாக எதிர் பார்த்துக் கொண்டிருப்பார்கள். கந்தசுவாமி குழந்தையாக இருந்தபோதே பழநியாண்டியாகக் கிளம்பியதை அறிந்துள்ள வாசகர்கள் இந்த நிகழ்ச்சி ஏன் விட்டுப் போயிற்று என்று வியந்திருக்கக் கூடும்.

பழநியாண்டவர் வரலாறு கந்த புராண நூலில் இல்லை. எனினும் பரம தத்துவங்கள் பல பொதிந்த சரிதம் அது. எனவே தெய்வத் தமிழ் முழுவதும் ஐயன் பாதம் பதித்துத் தென் கடற்கரையில் சாந்தனாக எழுந்தருளிய பின்னர் அந்த திக் விஜயத்தின் சிரோமணியான சரிதையை நாம் ஆர அமர அமைதியாய் அநுபவிக்கலாம் என்றே தள்ளி வைத்தோம். எல்லா உணவு வகைகளுக்கும் முன்னால் தயாரிக்கப்படும் இனிப்புப் பணியாரத்தைப் பருப்பன்னமும் சாற்றமுதன்னமும் படைத்த பின்னரே விருந்திடுவது நம் பண்பல்லவா? அதே போல் ஆதியிலேயே நடைபெற்ற இந்தப் பாலப் பருவ லீலையை இடைநிலையில் வாசகர்களுக்குப் படைத்து மகிழ்கிறோம்.

ஆயிரம் நரம்புகளை உடைய மகதியாழை மீட்டியபடி திருக்கைலாயம் வந்த நாரத முனிவர், முன்னொரு காலத்தில் தமக்கு அரிதிற் கிடைத்த தேவ மாதுளங் கனியைச் சிவபெருமான் திருவடியில் வைத்து வணங்கினார். அன்போடு அளிக்கப்படும் தும்பை, கொன்றை மலர்களையும் அருநிதியாகக் கருதி ஏற்று அருள்புரியும் சிவபெருமான் அந்தக் கனியை ஏற்று நாரதருக்குக் கிருபை புரிந்தார்.

விநாயகக் கடவுளும் குமாரக் கடவுளும் தந்தையை வணங்கிக் கனியைத் தருமாறு கோரினர். கனியை மைந்தருக்கு அளிக்க எண்ணிய சிவபெருமான், அதே சமயத்தில் இதன் மூலம் பேருண்மைகள் சிலவற்றை உலகுக்கு விளக்கவும் திருஉளம் கொண்டார்.

'பிருதிவி முதல் நாதம் ஈறான அளவிலா உலகங்களையெல்லாம் ஒரு நொடியில் சுற்றி வருகிறவன் எவனோ, அவனே தேவர் யாவரினும் பெரியோன்' என்று ஒரு காலத்தில் தேவர் முதல் பதினெண் கணத்தவர்களும் கூடிய சபையில் செய்யப்பட்ட ஒரு முடிவை இப்போது மாதேவன் நினைவு கொண்டார். சர்வ லோகங்களையும் ஒரு நொடிப் பொழுதில் வலம் வரவும், எல்லாவற்றையும் அறியவும், படைக்கவும், காக்கவும், அழிக்கவும், மறைக்கவும், அருளவும் வல்லவர் முழுமுதற் கடவுளாம் முருகக் கடவுள் ஒருவரே என்று தேவர் தெளிந்துய்ய இதுவே தருணம் எனக் கருதிப் பரமேசுவரன் ஓர் உபாயம் செய்தார்.

விநாயகரையும் குமாரக் கடவுளையும் நோக்கி, ''ஒரே கனியை உங்கள் இருவருக்கும் எவ்வாறு கொடுக்க இயலும்? உங்களில் அகில உலகத்தையும் ஒரு கணத்தில் யார் வலம் வருகிறீர்களோ அவர்களுக்கே இக் கனி'' என்று சிவபெருமான் கூறினார்.

சிவபெருமான் சொல்லி முடிப்பதற்கு முன்பே சர்வ லோக நாயகராகிய சரவணோற்பவர் மரகத மயில்மீதூர்ந்து விரைவில் உலகை வலம் வரப் புறப்பட்டு விட்டார். வாயு வேகம், மனோ வேகம் என்று சொல்லப் பெற்ற வேகங்கள் அவர் சென்ற வேகத்துக்கு ஓர் அணுத் துணையேனும் ஆகா. அதலம், விதலம், சுதலம், மகாதலம், தராதலம், இரசாதலம், பாதாலம் என்னும் ஏழுலகங்களையும் அவற்றுக்கு மேலுள்ள எட்டிலக்கம் யோசனை தூரமுள்ள கனிட்டம் என்னும் எட்டாவது பாதலத்தையும் வலம் வந்தார். பூமிக்கணுள்ள சப்த த்விபம், கடல்கள், மலைகள் முதலியவைகளையும், மேகம், வாயு, சூரிய, சந்திர, நட்சத்திர மண்டலங்களையும் துருவ நட்சத்திரமுள்ள புவர் லோகம், இந்திரன் வாழும் சுவர் லோகம், பிதிரர் வாழும் தவலோகம், மார்க்கண்டேயர் முதலான முனிவர் வாழும் சனலோகம், சனகாதியர் தவம் புரியும் மஹர் லோகம், சதுர்முகன் வாழும் சத்திய லோகம், நாராயணர் வாழும் வைகுண்ட லோகம் முதலிய உலகங்களையும் வலம் வந்தார். இவ்வாறாக பிரமாண்டங்களையும், பிருதிவி அண்டத்தில் உள்ள ஆயிரம் கோடி

அண்டங்களையும், அப்பு அண்டம், தேயு அண்டம், வாயு அண்டம், ஆகாய அண்டம், தன்மாத்திராண்டம் முதலிய அண்டங்களையும் வலம் வந்தார். பின் புவனம் முதலாக நாதம் ஈறாக உள்ள உலகங்களான பஞ்ச கலைகளுக்கும் உட்பட்ட மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம் என்னும் சொற் பிரபஞ்சங்களை யெல்லாம் ஒரு நொடிக்குள் வலம் வந்தார். இவ்வாறு செயற்கரிய செய்த செல்வக்குமரர் சிவபெருமான் விதித்த காலவரைக்குள் வெற்றி மகிழ்ச்சியுடன் திருக்கயிலைக்குத் திரும்பினார்.

பாவராயினு மிக்கவி
  விரைந்துபோர் கணத்திற்
பூவலங்கொடு வருதிரே
  லவர்க்கெனப் புகலத்
தூவியம்பகந் தோகைமா
  மஞ்ஞைமேற் றோன்றித்
தேவர்சேனைகா வலன்கீ
  யிழ்ந்துபார் சேர்ந்தான்

—பழநித் தல புராணம்

செகமுழுது முன்புதும்பி
  முகவனொடு தந்தைமுன்பு
திகிரிவலம் வந்த செம்பொன் மயில்வீர

— திருப்புகழ்





உலகங்கள் முழுவதையும் எவ்வாறு ஒரு நொடிப் பொழுதில் சுற்றி வர இயலும் என்ற கேள்வி எழலாம். எங்கும் வியாபியாய், சர்வ ஜீவ சாட்சியாய், சர்வ லோகங்களையும் தமக்கு அங்கமாகக் கொண்ட அந்துவாமூர்த்தியாகிய நம் அறுமுகப் பெருமானுக்கு இது ஓர் அருஞ் செயலல்ல.

பதி ஒருவர்; அவர் அசையாதவரல்லர். அவ்வாறு ஸ்திரமாக இருந்தும் விரைவாகச் செல்லும் மனம் முதலிய கருவிகளையும் கடந்து செல்கிறார். காற்று அவருடனிருந்தே உயிர்களுக்கு உடலின் அசைவைக் கொடுக்கிறது. இதை ஈசோபநிஷத மந்திரம் கூறுகிறது:

> அநேஜதேகம் மநஸோ ஜவீயோ
> நைநத்தேவா ஆப்நுவன் பூர்வமர்ஷத்
>
> தத்தாவதோ (அ)ந்யாநத்யேதி திஷ்டத்
> தஸ்மிந்நபோ மாதரிச்வா ததாதி

எவ்விடமும் முகங்களும், எவ்விடமும் கண்களும், எவ்விடமும் செவிகளும், எவ்விடமும் கைகளும், எவ்விடமும் திருவடிகளும், எவ்விடமும் வடிவமாகப் பெற்றவர் சுவாமி.

> **எங்கணும் பனிவதனங்கள் எங்கணும் விழிகள்**
> **எங்கணும் திருக்கேள்விகள் எங்கணும் கரங்கள்**
> **எங்கணும் திருக்கழலடி எங்கணும் வடிவம்**
> **எங்கணும் செறிந்தருள் செயும் அறுமுகத் திறைக்கே**

இத்தகைய அகண்ட வியாபக சச்சிதானந்தப் பரம்பொருள் தாம் என்பதை விளக்கு முகமாகவே குமாரகுரு உலகை ஒரு நொடியில் வலம் வந்தார்.

சூரியன் வானிலே நிற்கிறான். அதேபோதில் அவனது கிரணங்கள் உலகம் முழுவதையும் அளாவுகின்றன. ஞான சூரியன் கந்தன். அவரிலிருந்து எழும் கருணை ஒளி உலகம் முழுவதையும் தழுவ இமைப் பொழுது கூடத் தேவையில்லையே! அவர் கயிலையிலேயே இருப்பினும் அவரது கருணை கடாட்சம் சகல புவனங்களையும் நொடிப் பொழுதில் சுற்றி வந்து விடுமே!

சண்முகப் பிரபு இவ்வாறாக அகில உலகையும் வலம் வந்து கயிலை சேருமுன், கணபதி மற்றொர் அருட் செயல் புரிந்து விட்டார்! சிவத்தை விட்டு உலகம் அன்னியமாயில்லை; சர்வ லோகங்களும் அவரிலேயே அடக்கம் என்ற உணர்வில் விநாயகப் பெருமான் தந்தையை வலம் வந்தார். எல்லாப் பிள்ளைகளுக்குமே தங்கள் தந்தை உலகத்துக்கு ஒப்பானவர். பரமேசுவரன் — விநாயகர் விஷயத்தில் இது மும்மடங்கு உண்மையல்லவா? தம்மை வலம் வந்து வணங்கிய விநாயகச் செல்வனிடம் சிவ பெருமான் மனம் களித்துக் கனியை அளித்தார்.

இதன் பின்னரே உலகைச் சுற்றி வந்த இளைய புதல்வர் பழத்தைத் தமையன் பெற்றதைக் கண்டார். தியாக மூர்த்தியாகிய திவ்விய சந்நியாசத் திருக்கோலத்தில் பிரபஞ்சத்துக்குத் தரிசனம் தர வேண்டும் என்று திருவுளம் கொண்டிருந்த கந்தவேள் இத் தருணத்தைப் பயன்படுத்திக் கொண்டார்.

தமக்குக் கனி கிடைக்காததால் சினம் கொண்டது போலப் பாவித்து உடனே துறவியாகப் புறப்பட்டார். ஒரு கனியின் மீது விருப்பமுள்ளவர் தமது திவ்வியாபரணங்களையும், திருக் கைலாய வாசத்தையும், திவ்விய அன்பின் உறைவிடமான சிவபெருமானையும் அம்பாளையும் கணபதியையும் அவ்வளவு எளிதில் நீத்துவிட முடியுமா? அவ்வளவும் ஆண்டவனின் திருவிளையாடல். வள்ளி தேவ

# நாளொரு மேனியாக...

# எழிலோங்கச் செய்வது

# ரெக்ஸோனா








கொஞ்சி உறவாடி நாளொரு மேனியாக உமது
எழிலுக்குப் பொலிவை ஊட்டி வளர்ப்பது ரெக்ஸோனா.
இதில் வியப்பென்ன? சரும எழிலுக்கான தைலங்களின்
கலவையான 'கேடில்' இருக்கிறது ரெக்ஸோனாவிலே.
தவிரவும், கமகமவென்று மணம் கமழ்வதால்,
மணமோங்கி மலரும் உங்கள் பொலிவு.

**கேடில் அடங்கிய ரெக்ஸோனா உங்கள் சருமத்திற்கு உகந்தது.**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

RX. 24-140 TM

செளுபதியாகக் கலியாண வடிவில் துலங்கப் போகும் தாமே துறவி நாயகனுகவும் இலங்க வேண்டும் என்பதன் பொருட்டே ஆண்டவன் ஆண்டியாகப் புறப்பட்டார்.

தமிழகத்தில் தமிழ் வளர்ந்த மதுரையம்பதிக்கு அருகே ஒரு குன்றின்மீது எழுந்தருளினுர் கந்தப் பெருமான். உமையன்னை சகிதமாகப் பரமேசுவரன் அங்குப் போந்தார். ''பழமா, உனக்கா வேண்டும்? ஆனந்தச் சாறு நிறைந்த அமுதப் பழம் நீயே அல்லவா? தத்துவச் சாறு நிறைந்த தவப் பழம் நீயே அல்லவா? அநுபவச் சாறு நிறைந்த ஞானப் பழம் நீயே அல்லவா? அநுபூதி வேண்டி அருந்தவம் இயற்றுவோருடைய சாதனைகளின் பலனுக ஞானப் பழமாக விளங்கும் உன்னை யன்றிப் பழமும் உண்டோ? பழம் நீ'' என்ளுர்.

தட்சிணுமூர்த்தியாக இருந்து சிவபெருமானும், பர்வத ராஜபுத்திரியாக இருந்து பரமேசுவரியும் புரிந்த அற்புதத் தவங்களின் பயனுகப் பிறந்த பழம் அல்லவா கந்தவேள்? அவரைச் சிவனுரே 'பழம் நீ' என்று வாய் குளிர அழைத்தார்.

குமாரசுவாமி தங்கிய குன்றமும் பழம்நீ என்றே திருப் பெயர் பெற்றது. அதுவே தரும, அர்த்த, காம, மோட்ச பலன்களை அடியார்க்கு அளிக்கும் பழநி மலை.

இக்கனி வரலாற்றில் நுண் பொருட்கள் உள்ளன. 'ஒரு கனியைப் புதல்வர் இருவரும் விரும்பினுல் பகிர்ந்து தர லாகாதோ? அகில உலகத்தையும் ஒரு கணத்தில் ஆக்கவும், அளிக்கவும், நீக்கவும் ஆற்றல் படைத்த இறைவர் மற்றெரு கனியை உண்டாக்கித் தரலாகாதோ? காரைக்கால் அம்மையாருக்கு ஒன்றுக்கு இரண்டாகக் கனிகளை வழங்கப்போகும் வள்ளலன்ருே அவர்? ''தம்பியே கனி பெறுக!'' என்று தமையனுரும், ''தமையனே கனி பெறுக!'' என்று தம்பியாரும் கூறி ஒன்றுபட்டிருக்கலாகாதோ? அன்றியும் ஒரு கனி காரணமாக அகில உலகங்களையும் ஒரு நொடியில் வலம் வருவது முயற்சிக்குத் தக்க ஊதியமாகுமா? சகல வல்லபமும் உடைய வல்லப கணபதிக்கு உலகை வலம் வரும் ஆற்றல் இல்லையா? அல்லது சிவத்தை வலம் வருவதே உலகை வலம் வருவதாகும் என்பதை அறிவின் வடிவாகிய அறுமுகவேள் அறிய மாட்டாரா?' இப்படிப் பல ஐயங்கள்




''ஐயய்யோ! மரங்கொத்தி! இரு! இரு! நான் தூர ஓடிப்போயிடறேன்!''

எழலாம். இவ்வரலாற்றின் நுண் பொருளைக் காண்போம்.

சிவம் என்ற ஒன்றினுள் எல்லாவற்றையும் காணும் தன்மை ஒன்று.

எல்லாவற்றிலும் சிவத்தைக் காணும் தன்மை மற்றென்று.

'அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாக' அணுவுக்குள் அணுவாக ஆண்டவன் வியாபித்திருக்கிறுன். எல்லாப் பொருள்களிலும் தங்கி யிருக்கிறுன்.

அவனே, 'அகிலாண்ட கோடியெல்லாம் தங்கும்படிக்கு' அதாவது எல்லாப் பொருள்களும் தன்னுள் தங்குமாறும் விளங்குகிறுன்.

உலகப் பொருட்கள் யாவற்றிலும் தான் **தங்கி** யிருக்கிறுன்; உலகப் பொருட்கள் யாவும் தன்னிடம் **தங்க**வும் இருக்கிறுன்.

**ஸர்வ பூதஸ்தம் ஆத்மானம்**
**ஸர்வபூதானி சாத்மனி।**
**ஈக்ஷதே யோகயுக்தாத்மா**
**ஸர்வத்ர ஸமதர்சன:॥**
**யோ மாம் பச்யதி ஸர்வத்ர**
**ஸர்வம் ச மயி பச்யதி।**
**தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி**
**ஸ ச மே ந ப்ரணச்யதி॥**

'யோகியானவன் எல்லாப் பொருளிலும் ஆன்மா உறைவதாகவும் எல்லாப் பொருட்களும் ஆன்மாவிடத்தில்

உறைவதாகவும் காண்கிறான். எவன் என்னை எல்லாவற்றிலும் பார்க்கிறானோ எல்லாவற்றையும் என்னில் பார்க்கிறானோ, அவனுக்கு நான் காணாமற் போவதில்லை; அவனும் எனக்குக் காணாமற்போவதில்லை.' என்பதாக எல்லாவற்றையும் அந்தர்யாமியாகக் காணும் கண்ணனும் கீதையில் மொழிகிறார்.

இவ்விரு நிலைகளில், எல்லாப் பொருட்களும் பரமேசுவரனில் உறையும் நிலையை உணர்த்தும் பொருட்டு விநாயகப் பெருமான் தந்தையை வலம் வந்தார். ஈசனை வலம் வந்தது அகில புவனங்களையும் வலம் வந்ததற்குச் சமானமாயிற்று. எல்லாப் பொருட்களிலும் பரமேசுவரன் உறையும் நிலையை உணர்த்தும் பொருட்டு ஆறுமுக ஸ்வாமி அகிலாண்டங்களை வலம் வந்தார்.

வலம் வருதல் எதைக் குறிக்கும்? பக்தியை. உலக மாந்தர்கள் ஆண்டவனை வலம் வருவோம். அப்படியிருக்க ஆறுமுக ஸ்வாமி உயிரினங்கள் அடங்கிய உலகை ஏன் வலம் வந்தார்? உயிரினங்களிலெல்லாம் பரம்பொருள் உறைகிறது என்பதை உணர்த்தவே இவ்வாறு எளிமையும், விநயமும், அடக்கமும் கொண்டு உலகை வலம் வந்தார் அரும்பொருளாகிய அறுமுக சுவாமி.

ஒரே பரம்பொருள், சிவபெருமான் ஆனை முகன் ஆறுமுகன் என்ற வடிவங்களாக நின்று பரம தத்துவத்தை நமக்கு உணர்த்தவே கனியை ஒரு வியாஜயமாக வைத்துக் கொண்டது. கனி வரலாறு குறித்த எல்லாச் சங்கைகளுக்கும் இதுவே விடை.

அரும்பு — சரியை; மலர் — கிரியை; காய் — யோகம்; கனி — ஞானம். சிவத்தின்கண் இருந்த கனியே ஞானம். உலகுக்கு ஞானத்தில் விருப்பம் ஏற்படுத்த வேண்டுமென்ற ... வேலவர் இருவரும் ஒரே கனியை விரும்பியருளினார்கள். ஞானத்தைச் சிதைக்க முடியாதென்பதைத் தெளிவாக்கவே அக் கனியை அரனார் சிதைத்துத் தராதிருந்தார். ஞானத்துக்கு ஈடாக இன்றொன்று இல்லாததால்தான் வேறு கனியை அவர் படைத்துத் தரவில்லை. சிவத்துக்கு அந்நியமாக வேறு இன்மையைத் தெரிவிக்க விநாயகர் விமலனை வலம் வந்து ஞானமாகிய கனியைப் பெற்றார். ''எல்லாம் அவனே'' என்பதைத் தெரிவிக்க வடிவேற் பரமன் உலகை வலம் வந்து தாமே ஞானக் கனியாக நின்றனர்; ஞானமே அவர்; ஞான பண்டிதன்; ஞானந்தான் உருவாகிய நாயகன்.

ஞானமாகிய கந்தக் கனியை இன்றும் தம் கையில் மாதுளம் பழ உருவில் தாங்குகிறார் ஞானகரனாகிய விநாயகர். விநாயகர் கையில் மோதகம் அளிப்பது பிற்கால வழக்கு. பூரணப் பொருளாகிய அவர், மக்கள் செயற்கையாக வெல்லப் பூரணத்தை வைத்து மோதகம் செய்தளிக்கு முன், ஆண்டவன் படைப்பில் இயற்கையாகவே முத்துக்களை உள்ளே படைத்த மோதகமாகிய மாதுளங் கனியைத்தான் ஏந்தியிருக்கிறார். விநாயக ஜியான சுலோகத்திலும், பண்டைச் சிற்பங்களிலும் இந்த உண்மையைக் காணலாம். விநாயகர் கரத்தில் உள்ள அந்த மாதுளங் கனிதான் மாமதுரைச் செல்வமாகிய முருக நாயகன். உலகையெல்லாம் சுற்றி வரும் பராக்கிரமக்காரத் தம்பியாயிருப்பினும் அண்ணன் 'கைக்கு அடங்கிய பிள்ளை'யாக இருக்க வேண்டும் என்ற உண்மையை விளக்கு முகமாக வாஸ்தவமாகவே அண்ணன் கையில் கனியாக அடங்கியிருக்கிறார் கந்தவேள். (தொடரும்)

## பதினான்காம் அத்தியாயம்

# யாருக்கு வெற்றி?

# கயல்விழி



அகிலன்

சுந்தர பாண்டியனின் பிடி கயல்விழியின் மென்மையான கரத்தினூடே மின்னலின் அனலாகப் பரவியது. வேதனையில் வெந்து கருகிக் கொண்டிருந்த அவன் தன் வேதனைத் தீ முழுவதையும் அவளிடம் கொழுந்து விட்டெரியச் செய்தான்.

''கயல்விழி! இந்தப் போரை நாம் தவிர்க்க முடியாதென்று தோன்றுகிறது. போருக்கும் நான் அஞ்சியவனுமல்ல. ஆனால், வீரநரசிம்மனோடு போரிட்டு நான் மடிய நேர்ந்தாலும், வெற்றி வீரனாகவே மடிகிறேன் என்ற மன நிறைவு எனக்கு வேண்டும்!''

''மரணத்தைப் பற்றி இனியும் என்னிடம் பேசாதீர்கள்'' என்று கெஞ்சினாள் கயல்விழி. ''தாங்கள் வாழ்ந்தாலே இந்நாடு வாழும். தங்களுக்காகவே நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்.''

''நீ வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறாய். எப்போது என்னோடு ஒன்றி வாழப் போகிறாய்? எப்போது என் தலைவியாகவும் அரசியாகவும் வாழப் போகிறாய்? அதைச் சொல்!''

கயல்விழி மறுமொழி கூறவில்லை. தாமரைக் குளத்தின் தென்றல் கூட அசையாது நின்றது. மரங்களுக்கு மேலே நிலவு எட்டிப் பார்த்தது.

''கயல்விழி! மரணம் என்பது எனக்குத் துச்சமானது. அந்தத் துச்சத்தைத்தான் நான் முதன் முதலில் வெற்றி கொண்டேன். அந்த வெற்றிதான் நம் நாட்டுக்கும் வெற்றி தந்தது. என்னுடைய வெற்றி இப்போது பாதி வெற்றியாக நிற்கிறது. வீரநரசிம்மனைக் கூட நான் வென்று விடுவேன். ஆனால், அதற்கு முன்பாக நான் வெற்றி கொள்ள வேண்டிய மிகப் பெரிய சாம்ராஜ்யம் ஒன்று இருக்கிறது — அது இதோ இருக்கிறது!''

கயல்விழியின் நெஞ்சகத்துக்கு நேரே வேல் முனையைப் போன்ற தன் சிறு விரலைச் சுட்டிக் காட்டினான் சுந்தரபாண்டியன்.

''என்னுடைய ஒரு கனவை நிறைவேற்றி விட்டேன். நிறைவேற்றிய கனவை என்னால் கட்டிக் காக்கவும் முடியும். ஆனால் உலகத்திலேயே நான் வெற்றி கொள்ளத் துடித்த மிகப் பெரிய சாம்ராஜ்யம் நீதான். இமயத்தையே வெற்றி கொண்டு உனக்குக் காணிக்கை யாக்குகிறேன். நீ மட்டிலும் உன் இதயமாகிய புனிதமான சாம்ராஜ்யத்தை எனக்கு வழங்கிவிடு! லட்சக் கணக்கான மக்களின் உள்ளத்தில் தலைவனாக வீற்றிருக்கும் நான் உன் உள்ளக் கோயிலில் புகலிடம் கேட்கிறேன். — உனக்கு இரக்கம் இருக்கிறதா, கயல்விழி?''

''இளவரசே! தாங்கள் அங்கு இனித்தானா இடம் கேட்க வேண்டும்? கொடுங்குன்றத்துக் கோயிலிலேயே தங்களை நான் என்னுள் பிரதிஷ்டை செய்து விட்டேன். தங்களைப் போல் என்னால் தங்களிடம் வாய்

## இப்பொழுது நடைபெறுகிறது!

அனைவரும் பார்க்க வேண்டிய குடும்பச் சித்திரம்

பிப்ரவரி

**19 உ**

முதல்

**பாரகன்**
**மஹாராணி**
**உமா & ராம்**
மற்றும்
தென்னுடெங்கும்

சிவாஜி **கணேசன்** அளிக்கும்

# அன்புக் கரங்கள்



டைரக்ஷன்
**K.சங்கர்**
கதை-வசனம்
பாலமுருகன்
பாடல்கள்-இசை
வாலி சுதர்சனம்
ஒளிப்பதிவு-கலை
தம்பு A.பாலு
**சாந்தி**
**பிலிம்ஸ்**
தயாரிப்பு

ELEGANT

விட்டுப் பேசமுடியவில்லை. என்னுடைய எல்லாமே தாங்கள்தாம். இந்த நம்பிக்கை தங்களுக்கு இருந்தால் போதும்....!''

''அப்படியானால் எப்போது நம்முடைய திருமணம்?''

''நம்முடைய திருமணம் முன்பே நிறைவேறி விட்டது. நம்முடைய திருமணத்தால் பிறந்துள்ள குழந்தைதான் இந்தப் புதிய பாண்டிய நாடு. நாம் இருவரும் வரம் கேட்டு, தவமிருந்து, ஆடிப் பாடி அழுது புலம்பி, துன்பங்களை ஏற்றுப் பெற்றெடுத்த சின்னஞ் சிறு கண்மணி இந்தப் பாண்டிய நாடு! பிறந்தவுடனேயே நம் குழந்தைக்குத் துன்பம் வரப்போகிறதென்ற செய்தியைச் சொல்கிறீர்கள். அதைக் கேட்டதிலிருந்து நான் குழம்பிப் போயிருக்கிறேன்.''

''நம் குழந்தையைக் காப்பாற்றும் மருந்து உன்னிடம்தான் இருக்கிறது'' என்றான் சுந்தர பாண்டியன்.

நீண்ட பெருமூச்சு விட்டாள் கயல்விழி. சுற்றிலும் இரவு நேரத் தொடக்கத்தின் இனிய ஒலிகள் எழும்பிக்கொண்டிருந்தன. சில் வண்டுகளின் ஒலி, துள்ளும் மீன்களின் ஒலி, அன்னங்களின் ஊடல் ஒலி - இவ்வாறு பல்வகை ஒலிகள் ஒன்று சேர்ந்து அந்தக் குளத்தங்கரையில் இழைந்தன.

வானத் தடாகத்திலோ ஒரே ஒரு நிலவுத் தாமரை. இங்கேயோ அவர்களுக்கெதிரில் நூற்றுக்கணக்கான தாமரைகள்; அல்லி மலர்கள். அந்த நிலவு மயக்கத்தில் கூம்பிய தாமரைக் கூட்டத்துக்கும் மிதந்த அன்னங்களுக்கும் வேறுபாடே தெரியவில்லை.

இனியும் சுந்தரபாண்டியனிடம் ஏதும் பேசினால் அவன் திடீரென்று அங்கிருந்து எழுந்து போய்விடுவான் போல் கயல்விழிக்குத் தோன்றியது. விரக்தி கொண்டவனாக அவன் மாறிவிட்டால் அவனைக் கண்ணால் காணும் வாய்ப்புக் கூட அவளுக்குக் கிடைக்காது. அவன் பேசிய அவ்வளவும் அவள் இதயத்தில் தாமரைகளாக மலர்ந்து விட்டன. 'அவர் மீது அணுவளவும் தவறில்லை. இசைவு கூறும் பாக்கியம்தான் எனக்கு இல்லை' என்று அவள் நினைத்தாள்.

சுந்தர பாண்டியனின் கண்களில் கயல்விழியின் கண்கள் பதிந்தன. நகர்ந்து சென்று அவன் முழங்கால்களைப் பற்றிக் கொண்டு அதில் தன் தலையைச் சாய்த்தாள். தனது வலிமை அனைத்தையுமே அவனிடம் தாரை வார்த்து விட்டவள் போல் அவனிடம் சரணடைந்து விட்டாள்.

''என்னையே வழங்கி விடுமாறு கேட்கிறீர்கள். தாங்கள் கேட்குமளவுக்குத் தங்களைக் கொண்டு வந்து விட்ட துர்ப்பாக்கியசாலி நான்! ஆம், நான் துர்ப்பாக்கியசாலிதான்! அதனால்தான் என்னை அரசியாக்க வேண்டாம் என்கிறேன். அரியாசனத்தில் தாங்கள் எனக்குச் சரியாசனம் பங்கிட்டுத் தர வேண்டாம். இந்தப் பிறவியில் அதில் அமருவதற்கு எனக்குப் பேறு கிடையாது. ஆனாலும் நான் தங்களுடையவள். தங்களுடையவளேதான்! தயை செய்து என்னை நீங்கள் உங்களுடைய அன்புக்குரிய பாத்திரமான விறலியாக ஏற்றுக் கொள்ளுங்கள். பாணர் குல மங்கையாக, ஆடல் நங்கையாக, நான் எவ்வாறு பிறந்தேனோ, வளர்ந்தேனோ அவ்வாறே ஏற்றுக் கொள்ளுங்கள். அரசர்களின் அன்புக்குப் பாத்திரமான நங்கையர் உண்டல்லவா? நான் தங்களுக்கே ஆட்பட்டு விட்டேன். ஆனால் ... ஆனால் ....''

திடுக்கிட்டான் சுந்தர பாண்டியன். அரச வாழ்வு கண்டு அவள் அஞ்சி நடுங்கியதற்காக அவன் திடுக்கிடவில்லை. தன்னையே அவள் தாழ்த்திக் கொண்டு அவனிடம் சரணடைந்தது கண்டே துணுக்குற்றான்.

''ஆனால்...?''

''நான் தங்களின் அடிமைப் பெண்ணாகவே இருக்கிறேன். தங்களின் அடிமையாகவே என்னை ஏற்றுக்கொள்ளுங்கள். பாண்டிய சாம்ராஜ்யத்தின் அரியாசனத்தை அலங்கரிப்பதற்கு ஏற்றதோர் அரச குமாரியைத் தாங்கள் மணந்து கொள்ளுங்கள்!''

''கயல்விழி!''

கயல்விழி அவன் மடியில் நினைவிழந்து மயங்கிக் கிடந்தாள். பேச்சில்லை; மூச்சில்லை; எவ்விதச் சலனமுமில்லை. கொற்றவையாகக் காட்சியளித்த அதே பெண் இவ்வளவு மென்மையான உணர்வுகளையெல்லாம் கொண்டவளா!

சுந்தர பாண்டியன் அப்படியே அமர்ந்திருந்தான். அவனுடைய கண்ணீர் அவள் முகத்தை நனைத்தது: நனைத்துக் கொண்டே இருந்தது. சற்று நேரத்தில் அவள் தன் விழி திறந்தாள். அவள் முகத்தில் துயரம் தோய்ந்த புன்னகை தெளிந்தது.

''இப்படியே தங்கள் மடியில் படுத்து உறங்கி விடட்டுமா நான்? இதைவிடப்

பெரிதல்லவே எனக்கு அரியாசனம்? இப்படியே உறங்கினால் ஓராயிரம் இன்பக் கனவுகள் காண்பேனே!"

"உறங்க முடியுமா உன்னால்?"

'கலீர்' என்று சிரித்துவிட்டாள் கயல்விழி. அருகிலிருந்த ஒரு சிறு அல்லி மலரைக் கொய்து அவள் கூந்தலில் மெல்லச் செருகி விட்டான் சுந்தர பாண்டியன். செருகிக் கொண்டே, "உனக்கு நினைவிருக்கிறதா? இருக்கொடுங்குன்றத்து மங்கையொரு பாகர் இப்படித்தானே தமது மங்கை நல்லாளுக்குச் சூட்டி விடுகிறார்!"

"ஆமாம், அதே போல்தான் அன்று ஓர் இளம் புலவரும் ஒரு பாணர் குலப் பெண்ணுக்குச் சூட்டி விட்டார்—அது தங்களுக்கு நினைவிருக்கிறதா?"

"இன்றும் நான் உனக்குப் புலவன்தான்!" என்றான் சுந்தர பாண்டியன். "நீ விரும்பினால் நான் நாட்டைத் துறந்து விட்டு ஏடும் எழுத்தாணியும் எடுத்துக் கொண்டு உன்னோடு சோலைமலைக் காட்டுக்கே வந்து விடுகிறேன். சேர நாட்டு ஆட்சியைத் துறந்து விட்டுச் சிலம்பு பாடவில்லையா, இளங்கோ? அப்படியே நானும் ஏதாவது காவியம் பாடுகிறேன்!"

"வேண்டாம், இளவரசே! விளையாட்டுக்குக் கூட இப்படிச் சொல்லாதீர்கள்" என்றாள் கயல்விழி. "தங்களைப் போன்ற ஒரு வீரரைத் தலைவராகப் பெற்றதால் இந்த நாடு எவ்வளவோ பெருமை பெற்றிருக்கிறது; இனியும் பெறப் போகிறது. நாம் பெற்ற குழந்தைகள் இந்த நாட்டுக் குடிமக்கள்! மக்களை விட்டு விட்டு யாரும் காட்டுக்கும் மலைக்கும் ஓடுவார்களா?"

"உன்னைச் சொல்லாலும் வெல்ல முடியாது போலிருக்கிறதே!" என்று கூறி நகைத்தான் சுந்தர பாண்டியன்.

"முதலில் தாங்கள் வென்றது என்னைத்தான்" என்றாள் கயல்விழி. "வைகைக் கரையில் என்னைத் தாங்கள் வெற்றி கொண்டு விட்டீர்கள். தடுத்தாட்கொண்டு விட்டீர்கள்."

நிலவொளியில் அவர்கள் எழுந்து நடந்து மாளிகைக்குள் புகுந்தார்கள். மறுநாள் அரச பரிவாரம் பொன்னமராவதியிலிருந்து மதுரைக்குக் கிளம்பியது.

### பதினைந்தாம் அத்தியாயம்

# சாதனையின் சோதனை

நான்மாடக் கூடலாம் மதுரைத் திருநகரம் வெற்றி கொண்ட இளைய பாண்டியனை வரவேற்பதில் களிவெறி கொண்டு விட்டது. முன்னாள் பட்ட அழிவிலிருந்து அந்த நகரத்தையும், அதன் மக்களையும் மீண்டும் உருவாக்கியவன் அவன். நாட்டில் மண்டிக் கிடந்த அடிமை இருளைச் சுட்டெரித்துச் செயற்கரும் செயல் முடித்துத் திரும்பியவன் — மதுரையைப் பின்பற்றிப் பாண்டிய நாடே விழாக் கோலம் கொண்டு குதூகலித்தது.

சுந்தர பாண்டியன் தன் மக்களுக்கு வெற்றி விழாச் செய்தியை அனுப்பினான். தலைவர்கள் அதனை முரசுகள் மூலம் சதுக்கத்துக்குச் சதுக்கம் சந்திக்குச் சந்தி ஒவ்வோர் ஊரிலும் பரப்பினார்கள்.

"இந்த வெற்றி உங்களுடைய உழைப்பின் வெற்றி; ஊக்கத்தின் வெற்றி; ஒற்றுமையின் வெற்றி! நம்முடைய வெற்றி உணர்வு விழாக் களிப்போடு ஓய்ந்து விடக் கூடாது. வெற்றித் திருமகளை இன்றுதான் நாம் மணந்து கொண்டு பாண்டிய நாட்டுக்கு அழைத்து வந்திருக்கிறோம். அவளைப் பேணிக் காக்க வேண்டிய கடமை நம்முடையது. உழவர், தொழிலாளர், வணிகர், அதிகாரிகள், படைவீரர்கள், ஆன்றோர், அறவோர் அனைவருமே தங்கள் தங்கள் தொழிலை முன்னிலும் பன்மடங்கு சிறப்பாகச் செய்ய வேண்டும். நாட்டைக் காக்கவும், வீட்டைக் காக்கவும் ஒவ்வொருவரும் நெறி தவறாது உழைக்க வேண்டும். அடுத்த போர் நம்மைத் தேடி வந்தால் அதிலும் நாம் நிச்சயம் வெற்றி பெறுவோம்!"

செய்தியோடு நிறுத்தாமல் அந்தச் செய்தி செயலாக வளர்வதற்காகவும் வேண்டிய ஏற்பாடுகளை மளமளவென்று கவனித்தான் சுந்தர பாண்டியன். கலைஞர்களையும் புலவர்களையும் மக்கள் கூட்டத்திடையே அனுப்பி வைத்து அவர்களுடைய இதயத்துக்கும் சிந்தனைக்கும் உணவு கொடுக்கச் செய்தான். கோசல சாம்ராஜ்யத்தின் பகைமையைப் பற்றிய செய்தியும் மக்க



"இந்திராணி, இந்திராணின்னு கூப்பிடறேன் உன் காதில் விழ வில்லையோ?"

"இனிமேல் என் பெயர் இந்திராணி அல்ல. தமிழ் ராணின்னு கூப்பிடு!"

ளிடையே பரவத் தொடங்கி, அவர்களிடையே விழிப்பு உணர்ச்சி மிகுந்தது.

விழிப்புடன் இருந்த பாண்டிய நாட்டு அரண்மனைக்குள் ஒரு திகைப் பூட்டும் செய்தி புகுந்தது. மழவச் சக்கரவர்த்தியே அந்தச் செய்தியைக் கொண்டு வந்திருந்தார்.

அரண்மனை அந்தரங்க ஆலோசனை மண்டபத்தில் பெரிய பாண்டியர், சுந்தர பாண்டியன், விழுப்பரையர், மழவச் சக்கரவர்த்தி ஆகிய நால்வரும் கூடியிருந்தார்கள்.

"திறைப் பொருள் அனுப்பி வைப்பதாகக் கூறிய நாளில் இராஜ ராஜன் திறை அனுப்பவில்லை. நம்முடைய காவலர்களை அனுப்பி நினைவூட்டிய போது, 'பாண்டியர்கள் திறை அனுப்பும் நாள் திரும்பப் போகிறதென்று சொல்லுங்கள்' என்று கூறிவிட்டானாம். சாம்ராஜ்யம் பறி போய்விட்டாலும் அந்தப் பழைய செருக்கு இன்னும் அவனை விட்டு அகலவில்லை."

"வெறும் செருக்கில்லை. அவனுக்குப் பின்னே உள்ள துணை வலிமை அவனை இவ்வாறு நடந்து கொள்ளச் சொல்கிறது" என்றார் பெரிய பாண்டியர்.

"சயங்கொண்ட சோழ வல்லபர் இப்போது கங்காபுரியில்தானே இருக்கிறார்?" என்று கேட்டார் விழுப்பரையர்.

"அவரைப் பற்றித்தான் இப்போது சொல்ல வந்தேன்" என்று மீண்டும் தொடங்கினார் மழவச் சக்கரவர்த்தி; "சோழ வல்லபரே இப்போது இராஜ ராஜனின் வலது கரமாக விளங்குகிறார். அவருடைய ஆலோசனைகளின் படியே யாவும் நடைபெறுகின்றன. நமக்குத் திறைப் பொருளை மறுத்த மறு நாளே அவர் பெருத்த பொருட் குவையோடு காஞ்சிக்குப் புறப்பட்டிருக்கிறார். கோசல நாட்டு வீர நரசிம்மன் காஞ்சிக்குத் திரும்பியதாகச் செய்தி கிடைத்திருக்கிறது."

சுந்தர பாண்டியன் துடித்தான். படையெடுப்பின்போது சோழ நாட்டின் தன பண்டாரம் வெறுமையாகக் காட்சியளித்தது. பொருளை ஒளித்து வைத்து விட்டு, "ஏதுமே இல்லை!" என்று அப்போது சாதித்தான். அதில் ஒரு பகுதியை முதலில் திறையாகப் பெறுவதற்கே பொன்னமராவதியில் ஒப்பந்தம் நடைபெற்றது.

"அப்போதே ஒப்பந்த ஓலையைக் கிழித்தெறிந்து விட்டான். செய்தி கேட்டும் நாம் பேசாதிருந்தோம். இப்போது நமக்குச் சேர வேண்டிய திறைப்பொருள் நம்மீது படையெடுக்கச் செய்வதற்காக வீர நரசிம்மனுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது" என்றான் சுந்தர பாண்டியன்.

"பொருளோடு சென்றிருக்கும் சோழ வல்லபர் நம் நாட்டில் அமைச்சராக இருந்தவர். நம்முடைய எல்லைகள் நாட்டு இரகசியங்கள், மக்கள் மனப் போக்கு யாவற்றையும் அறிந்தவர். வீரநரசிம்மனின் மனத்தைக் கலைக்கும் சொல்லாற்றலும் அவரிடம் உண்டு. உடனடியாக நாம் ஏதும் நடவடிக்கை எடுத்தாக வேண்டும்." மழவச் சக்கரவர்த்தி மெய்யாகவே அதிர்ச்சியடைந்திருந்தார்.

பெரிய பாண்டியரும் விழுப்பரையரும் மௌனமாகச் சுந்தர பாண்டியனின் முகத்தைப் பார்த்தனர்.

"நீ என்ன கூறுகிறாய்?" என்று கேட்டார் பாண்டியர்.

"நாம் இப்போதே படைகளை அனுப்பித் தீரவேண்டும். இல்லாவிட்டால் நம்முடைய இந்த வெற்றி நிலைக்காது. நம்முடைய வலிமையைக் குறைவாக மதிப்பிட்டு விடுவார் வீர நரசிம்மன். மழவச் சக்கரவர்த்தியின் தலைமையில் வீரர்களை அனுப்புவோம். இராஜ ராஜனைச் சிறை செய்து

மதுரைக்குக் கொண்டு வருவோம். அவனை நம்மிடம் வைத்துக் கொண்டு பிறகு கோசல நாட்டுடன் போர் தொடுப்போம்; அல்லது அவர்கள் இணங்கினால் நட்புடன் பேசுவோம்.''

''வீர நரசிம்மன் இணங்குவாரா?'' என்று கேட்டார் பாண்டியர்.

''நாம் இதற்கு இணங்கலாமா?'' என்று கேட்டான் சுந்தர பாண்டியன். ''வீரத்துக்கு உறைவிடம் வீரநரசிம்மன் மட்டும்தான் என்று நினைக்க நாம் இடம் கொடுத்துவிடக் கூடாது. வருவது வரட்டும். நாம் முதலில் தாக்குதல் நடத்துவதே போருக்குரிய இலக்கணம்!''

தம்பியின் கூற்றை மறுக்கவும் முடியாமல் ஏற்றுக் கொள்ளவும் முடியாமல் தயங்கினார் குலசேகர பாண்டியர். சுந்தர பாண்டியனின் கருத்தே சிறந்தது என்று அவருக்கும் தோன்றியது. ஆனால், 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை' யல்லவா? வீரநரசிம்மனிடம் வலியச் சென்று போருக்கு அழைக்கிறானே இவன்!

''அரசர் அவர்களுக்கும் இளவரசர் அவர்களுக்கும் ஒரு சிறு ஆலோசனை..'' என்றார் புலவர் விழுப்பரையர்.

''கூறுங்கள்!'' என்றார்கள் இருவரும் ஒரே குரலில்.

''இளவரசர் படைகளை உடனடியாக அனுப்ப வேண்டியதும் நியாயம் தான். இராஜராஜனை அவன் போக்கில் விட்டு வைக்கவும் கூடாது. அதே சமயம் வீரநரசிம்மன் நம்மீது கடும் பகை கொண்டு விடாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும்.''

''அது எப்படி முடியும்? 'அம்பு எய்து வீழ்த்தவும் வேண்டும்; வீழ்ந்தவருக்கு வேதனையும் கூடாது' என்றால், அது நடைபெறக் கூடியதா?'' என்றான் இளைய பாண்டியன்.

''வீர நரசிம்மனின் பகைமை நமக்கு ஆபத்தானது. அதைத் தவிர்ப்பதற்கு நாம் தயங்கக் கூடாது. மழவச் சக்கரவர்த்தி கங்காபுரியில் போர் நடத்தட்டும். நான் காஞ்சி நகருக்கு நட்புறவு பேசத் தூது போகிறேன்!''

விழுப்பரையரை அன்போடு தழுவிக் கொண்டார் பாண்டியர். ஒரே சமயத்தில் இரு வழிகளையும் பின்பற்றும் இராஜதந்திர ஆலோசனை அவருக்குச் சமய சஞ்சீவியாகப் பட்டது.

''இப்படியே செய்வோம். நான் படையெடுத்துச் செல்கிறேன்; புலவர் ஏடு எடுத்துச் செல்லட்டும்'' என்றார் மழவச் சக்கரவர்த்தி.

சுந்தர பாண்டியனுக்கு அது பயன் தர முடியாத முயற்சியாகத் தோன்றியது. ''ஏற்கனவே அங்கு ஜயங்கொண்ட சோழ வல்லபர் வேறு இருக்கிறார். இந்த நிலையில் நாம் தூது அனுப்புவது நெருக்கு மாறாகவே முடியலாம். புலவர் அவர்களை நாமே வலிந்து கோசல நாட்டுச் சிறைக்கு அனுப்புகிறோம். நாம் இராஜ ராஜனைச் சிறை செய்வதற்குப் பிரதியாக அவர்களுடைய சிறைக்கு விழுப்பரையர் அவர்களை நாமே வழியனுப்பி வைக்கிறோம்.''

''நான் அப்படியே சிறைப்பட்டால் என்ன நேர்ந்துவிடும்? சிறையிலிருப்போரை விடுவிப்பதற்காகவாவது இரு நாடுகளும் நட்புக் கொள்ள என்றால் ஒரு வாய்ப்புக் கிடைக்குமே!'' என்றார் விழுப்பரையர்.

தியாகத்திலேயே ஊறித் திளைக்கும் அவர் உள்ளம் அவர்கள் அனைவரையும் நெக்குருகச் செய்தது.

''தூது செல்லும் புலவனை அவர் சிறைப்படுத்த மாட்டார். அப்படியே ஏதும் நடந்தாலும் நாட்டுக்கு நன்மையாகத்தான் முடியும். ஆகவே, தூது செல்ல எனக்கு அநுமதி தாருங்கள்.''

புலவருக்கும் படைத் தலைவருக்கும் அவரவர்கள் செயலை நிறைவேற்ற அநுமதி கிடைத்து விட்டது. சுந்தர பாண்டியன் வீரர்களை அனுப்பி வைக்கும் வேலையில் முனைந்து விட்டான். விழுப்பரையர் பெரிய பாண்டியரிடம் செய்திகளைக் கேட்டுக் கொண்டார்.

அரண்மனையின் அந்தப்புரத்துக்குள் செய்தி எட்டியது. போரும் உடன்பாடும் ஒன்றாக நடைபெறப் போகும் செய்தி பற்றிக் கயல்விழியும் அறிந்துகொண்டாள். பரபரப்பு மிக்க சூழ்நிலை அரண்மனைக்குள்ளேயும் உருவாகி விட்டது. உடன்பாடு வெற்றி பெறும் என்ற நம்பிக்கை யாருக்குமே அங்கு இல்லை.

விழுப்பரையரைத் தனியே கண்டு அவர் கரங்கள் இரண்டையும் பற்றிக் கொண்டாள் கயல்விழி. ''நானும் தங்களுடன் காஞ்சிக்குப் புறப்பட்டு வர வேண்டும். எப்படியாவது என்னையும் தங்களுடன் அழைத்துச் செல்ல மறுக்காதீர்கள்; யார் மறுத்தாலும் என்னை விட்டு விடாதீர்கள்!'' என்றாள்.

விழுப்பரையருக்குத் தம்முடைய தூது முயற்சியை விடக் கயல்விழியின் வேண்டுகோளே பெரிய சோதனையாகத் தோன்றியது. **(தொடரும்)**

# மானத்தின் விலை

அன்று பொழுது விடியும்போதே என் மனம் மகிழ்ச்சியில் துள்ளிக் கொண்டிருந்தது. தினந்தோறும் எழுந்தவுடன் கண்ணில்படும் காரை உதிர்ந்த சுவர்கள், அவற்றில் தொங்கவிடப்பட்டிருந்த கிழிந்த காலண்டர் படங்கள், அவற்றுக்கும் மேலே மாட்டப்பட்டிருந்த மங்கின புகைப்படங்கள் யாவுமே என் மனத்தைக் கவர்ந்தன. ஒவ்வொன்றிலும் எங்கிருந்தோ ஒரு புதிய அழகும் கவர்ச்சியும் வந்து குடியிருக்கத் தொடங்கிவிட்டன! எழுந்து வாசலறைக்கு வந்தேன்; ஜன்னல் வழியாகப் பார்த்தேன். அடடா! அந்தப் பாசி பிடித்த அழுக்குக் குளம்கூட அல்லவா என் உள்ளத்தில் ஒரு பசுமையான நெகிழ்ச்சியை எதிரொலிக்கிறது. அதோ வாசலில் கோலமிட்டுக் கொண்டிருப்பது யார்? என் மனைவி பத்மாவா? கண்களை நம்பமுடியவில்லை! எப்படி ஒரே நாளில் இப்படிப் பத்து வயது குறைந்துவிட்டாள்? உள்ளே சமையற்கட்டில் சத்தம் கேட்கிறதே. அது குழந்தைகள் அழும் சத்தமா? அல்லது அலை பாடும் உதய கீதமா?...

கண்களை உள்ளங்கையால் கசக்கிக் கொண்டு பார்த்தேன். உண்மையில் அந்தக் காலை நேரத்தில் உலகமே அன்றலர்ந்த தாமரை மலர் போல் புத்தம் புதிய சோபையுடனும் மணத்துடனும் தோன்றி உள்ளத்தில் ஓர் இன்ப லாகிரியைக் கொடுத்தது. வாழ்க்கையே இன்பமயமாகத் தோன்றியது.

எப்படி இந்த மாறுதல் ஏற்பட்டது? யார் இந்த ஜாலத்தைச் செய்திருக்க முடியும்? காரணம் சுலபத்தில் எட்டவில்லை. உள்ளத்தின் அடியிலே எங்கோ புதைந்து கிடந்த மகிழ்ச்சிக் குமிழிகள் ஒவ்வொன்றாக வெளி வந்த வண்ணமாக இருந்ததை உணர முடிந்ததே தவிர அதன் மூல காரணத்தை அறிய முடியவில்லை. நேற்று வரையும் தலையை அழுத்திக் கொண்டிருந்த சுமக்க முடியாத அந்தப் பளு எங்கே ஓடி ஒளிந்து கொண்டு விட்டது என்று வியப்பில் ஆழ்ந்திருந்தேன்.

திடீரென்று ஒரு நினைவு அலை வந்து தாக்கியது! ஆம், இவ்வளவுக்கும் காரணம் நேற்று இரவு ராமசாமி வந்து சொல்லி விட்டுப் போன சங்கதிதான்!

அந்த நினைவு முளைத்ததுமே உள்ளத்தில் வெள்ளிய பால் நிலவு வீச ஆரம்பித்தது!

அவன் வருவதற்குச் சற்று முன்புதான் என் வீடு இரண்டுபட்டது. என் மனைவி — இப்போது பத்து வயது குறைந்து

சாமா

பூவாளூர் சுந்தரராமன்

மணப்பெண்போலத் தோன்றுகிறாளே, அவள் ஒரு 'பாட்டம்' என்னைக் குறை கூறி ஓய்ந்திருந்தாள்; இடையிடையே உணர்ச்சி வெள்ளம் பெருகக் கத்தி, அழுது புலம்பி, ஆர்ப்பாட்டம் செய்திருந்தாள். மறுநாள் காலை அவள் பிணத்தைப் பார்க்கும்படியான பாக்கியம்தான் எனக்குக் கிட்டப் போகிறது என்று எச்சரித்திருந்தாள்!

என் குழந்தைகள் — சாதுக்கள் என்று சொல்ல முடியாது — இந்த அப்பா அம்மா போராட்டத்தைப் பார்த்து அரந்து போய், அமைந்து ஒரு மூலையில் உட்கார்ந்து விட்டன! மூச்சுப் பரியவில்லை!

அப்போதுதான் ராமசாமி அந்த 'நல்ல செய்தி'யைக் கொண்டுவந்தான். என்னை ரகசியமாகக் கூப்பிட்டுக் காதோடு காதாக விஷயத்தைச் சொன்னான்.

அவ்வளவுதான்; அதுவரையிலும் அமாவாசை போல இருண்டிருந்த என் உள்ளத்து வானத்தில் முழுச் சந்திரன் வெண்ணிலவு வீசிக் கொண்டு உதயமாகி விட்டான்! அடுத்த ஐந்து நிமிஷ நேரத்தில் வீட்டில் எல்லாருமே சிரித்து விளையாடத் தொடங்கி விட்டார்கள்! அரை மணிக்கு முன் நிலவியிருந்த சண்டையும் பூசலும் போன இடம் தெரியவில்லை! பத்மா சாந்தமாகி, குழைய ஆரம்பித்தாள். அஞ்சி ஒடுங்கிக் கிடந்த குழந்தைகள் என்னைச் சுற்றிக் கண்ணாமூச்சி விளையாடத் தொடங்கி விட்டன!

சென்ற பதினைந்து நாட்களாகவே வீடு வீடாக இல்லை; நரகமாக இருந்தது. எந்தப் பக்கம் திரும்பினாலும், யாரைப் பார்த்தாலும் என்னைக் கண்டு ஏகவது போலத் தோன்றிற்று: 'கையால் ஆகாதவன்' என்று காித்துக் கொட்டுவது போல் என் கண்ணில் பட்டது. நான் ஒரு மனிதன், எனக்கும் உணர்ச்சி, தன்மானம் இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ளாதவர்கள் போல நடந்து கொண்டார்கள். ஊராரிடமும், உற்றாரிடமும் 'ரொம்ப சாது' என்று பெயர் வாங்கின பத்மா, பத்ரகாளியாக மாறி என்னுடன் சண்டை போட்ட வண்ணமாக இருந்தாள். என்னை மணந்துகொண்டதால் அவளுக்கு ஏற்பட்ட நஷ்டத்தைப் புள்ளி விவரங்களுடன் நிரூபித்தாள். அவளைக் 'கைப்பிடித்த நாளிலிருந்து நான் செய்து வந்த மன்னிக்க முடியாத தவறுகளை யெல்லாம் அழுத்தம் திருத்தமாக எடுத்துக் காட்டி, அவற்றை அவள் எவ்வளவு கருணை உள்ளத்துடனும் பெருந்தன்மையுடனும் மன்னித்து வந்தாள் என்பதையும் அலசி அலசிக் காட்டினாள். முடிவாக என்னைப் போன்றவர்கள் பிரம்மசாரிகளாக இருந்து காலத்தைக் கழிக்க வேண்டுமே தவிர இம்மாதிரி கல்யாணம் செய்துகொண்டு குழந்தைகளையும் பெற்றுக் கொடுத்து, எல்லோருடைய ஆசா பாசங்களையும் பொசுக்கிக் கருக்கிக் கொண்டு மோசமான அவல வாழ்வு வாழக் கூடாது என்று சபித்தாள்!

இவ்வளவுக்கும் காரணம் — என் ஆற்றாமைதான்! எப்போது யார் எது கேட்டாலும் உடனே நான் கூறும் "ஆகட்டும், பார்க்கலாம்!" என்ற பல்லவிதான் இந்தக் கூரைவளியை உண்டாக்கி யிருந்தது!

தீபாவளியின்போதே என் குடும்பத்தினருடைய மனம் புண்ணாகித்தான் இருந்தது: வருஷத்துக்கு ஒரு நல்ல நாளான அன்றுகூட அவர்களுக்குத் தேவையான சாதாரண— குறைந்த விலையில் கிடைக்கும் துணிமணிகளைக்கூட என்னால் வாங்கித் தரமுடியவில்லை! வருமானம் அவ்வளவு கட்டை! அது பெருக வழியும் இல்லை. பலசரக்குக் கடை, பால்காரன், வீட்டுக்காரர் இப்படி எல்லாரிடத்தும் கடன்பட்டிருந்தேன். என்னைப் பார்த்தாலே அவர்களுக்கு அலட்சியம்.

வீட்டுக்குள் நுழைந்தால் ஒவ்வொருவராக வந்து என்னை அரிக்கத் தொடங்கினார்கள்.

''அப்பா, எதிர் வீட்டு எச்சுமுவைப் பார்த்தாயா?...''

''ஏன்? அவளை எதற்குப் பார்க்க வேண்டும்?....''

''உம்... உனக்கு என்ன தெரியப் போகிறது? அவள் நைலக்ஸில் ஒரு சித்தாடை கட்டிண்டிருக்காளே! அதே மாதிரி எனக்கும்.''

''ஆகட்டும், அம்மா!....''

''விலைகூடக் குறைச்சலாம்பா! நாப்பத்திரண்டு ரூபாய்தானாம்!''

''பார்க்கலாம்மா!''

அவளுக்கு நாற்பத்திரண்டு ரூபாய் குறைந்த தொகையாகத் தென்பட்டது! ஒவ்வொரு மாதமும் நாற்பத்திரண்டு நயா பைசாக்களைக்கூட எனக்கு மீந்த முடியவில்லை என்பது அவளுக்குத் தெரியாதே!

பையன் கொஞ்சம் கெட்டிக்காரன்!

''போமே! உனக்கு ஒருத்திக்கே நாற்பத்திரண்டு ரூபாய் செலவழிப்பானோ!.... அப்பா, எனக்கு ஒரு டெரிலின் ஸ்லாக்...''

''சரி, ஆகட்டுமடா!''

சமையற்கட்டிலிருந்து அடுத்த நிமிஷம் ஒரு வெடி கிளம்பியது!

''எல்லாத்துக்கும் இந்த 'ஆகட்டும்' பல்லவிதானுக்கும்! குழந்தைகள் வாசலிலே போறவள் பத்துப் பேர் கட்டிண்டிருக்கிறதைப் பார்த்துட்டுக் கண் கலங்குகிறதுகள். அவாளுடைய ஆசையைத் தீர்க்க வகையைக் காணோம்! வாய் கிழியறது!''

பத்மா இப்படி ஆரம்பித்து விட்டால் பின் அவள் கண்டனங்களுக்கு அளவே இராது! நான் இடையே ஒன்று குறுக்கிட்டால் ஒன்பது பதிலுக்குக் கிடைக்கும். நானும் விட்டுக் கொடுக்காமல் அவள் குரலின் ஸ்தாயி இறக்கம் கண்டபோது இரண்டொன்று சொல்லி வைப்பேன். நான்மட்டும் உப்புப் போட்டுக்கொண்டு சாப்பிடவில்லையா?

நான்மட்டும் இவளைக் கல்யாணம் செய்துகொள்ளாமல் கமலாவைக் கல்யாணம் செய்து கொண்டிருந்தால், அவளுடைய தகப்பனார் அவள் மீது எழுதி வைக்கிறேன்னு சொன்ன நாலாயிரம் ரூபாய் வந்திருக்கும்: அதை வைத்துக் கொண்டு ஏதாவது வியாபாரத்தில் இறங்கியிருந்தால் இப்போது லட்சாதிபதியாக இருந்திருப்பேன். சொந்தத்தில் பங்களா; கார், பாங்கியில் ஐந்து

உங்கள் குடும்பத்தினருக்கு நாள் முழுவதும்
நீடிக்கும் புத்துணர்ச்சியளிக்க,
சிக்கனமான
ஆல்-பர்ப்பஸ் ப்ரோடெக்ஸ் டால்க்








உங்கள் குடும்பத்திற்கு இன்றே ஒரு டப்பாவை வாங்குங்கள்!
ப்ரோடெக்ஸ் ஆல்-பர்ப்பஸ் டால்கம் பவுடர்

ஆறு இலக்கங்களில் கணக்கு! அதையெல்லாம் விட்டுவிட்டு இவளைக் 'கட்டி'க் கொண்டேனே என்று தலையில் மெதுவாக அடித்துக் கொள்வேன்!

இந்த அஸ்திரத்துக்கு அவளுக்கா பதில் சொல்லத் தெரியாது?

"அப்படிச் செய்து கொண்டிருக்கணும். வேடிக்கை பார்க்கணும்!... கல்யாணம் பண்ணிக் கொண்ட மூணும் மாசமே அவள் ஓடிப் போயிருக்க மாட்டாளா? நானாக இருக்கத்தொட்டு....!"

அதற்குப் பிறகு நான் அவளிடம் வாய் கொடுக்க மாட்டேன்!

இப்படித் தினந்தோறும் காரியாலயத்துக்குப் புறப்படு முன்பும், அங்கிருந்து வந்த பிறகும் ஒரு போராட்டம் நடைபெற்று வந்தது. கடைசியில் தீபாவளியின் போது அவர்களுடைய ஆசைக் கனவுகளை யெல்லாம் பொங்கல் நன்னாளன்று நனவு ஆக்குவதாகவும், அதற்குள் எனக்கு எப்படியாவது பணம் வந்துவிடும் என்றும் கூறிச் சமாதானப்படுத்தினேன். தீபாவளி ஒருவாறு கழிந்தது!

பொங்கலுக்கு இரண்டு வாரங்கள் இருக்கு முன்பே திரும்பவும் வீட்டில் போராட்டம் ஆரம்பமாயிற்று. ஒருநாள் அது உண்ணு விரதமாகக் காட்சியளிக்கும். அடுத்த நாள் மௌன விரதம்! எனக்கு எதிரிலேயே என்னைப்பற்றித் தூஷணைகள்! கண்டனங்கள்!

நிலைமை மேலும் மோசமாக மாறுவதற்கு முன் நூறோ, இருநூறோ கடன் வாங்கி அவர்களுடைய கோபத்தைச் சாந்தப்படுத்துவது என்று தீர்மானித்தேன். எனக்குத் தெரிந்த, சில சமயங்களில் தெரியாத நண்பர்களிடமெல்லாம் படையெடுத்தேன். அவர்களைப் பற்றிப் புகழ்ந்தேன். அவர் 'ஹாஸ்யத்துக்கு' வாய் விட்டுச் சிரித்தேன். நடுவே கடனையும் கேட்டுப் பார்த்தேன். கடன் கேட்டதுமே அவர்கள் முகம் மாறிவிட்டது. காது கூடச் சில சமயங்களில் செவிடாகி விட்டது!

ஏழைக்கு எவன் கடன் கொடுப்பான்? நாளைக்கு 'இன்ஸால்வெண்ட்' கொடுக்கப் போகிற பணக்காரனாக இருந்தாலும் அவன் கேட்காமலே இன்றைக்கு அவனுக்குக் கடன் கொடுக்கிறார்கள். என்னுடைய இந்த முயற்சி வெற்றியடையாமல் போகவே, கடன் வாங்கிக் கொடுக்கும் தரகனான ராமசாமியைப் பிடித்து அவனுக்குப் பத்து ரூபாய் கொடுப்பதாகச் சொல்லி இருநூறு ரூபாய்க்கு ஏற்பாடு செய்யச் சொல்லிவிட்டு வந்தேன். அதைச் சொல்லத்தான் அவன் வந்திருந்தான்.

"இதோ பார் ரகு! முதலில் அந்த ஆள் கொஞ்சத்தில் ஒப்புக்கொள்ளவில்லை. பிறகு என்னால் அவர் அடைந்த லாபத்தை எடுத்துச் சொல்லி அவரை ஒப்புக் கொள்ளச் செய்வதற்குள் என்பாடு தீர்ந்துவிட்டது!" என்றான் ராமசாமி. மாதம் இருநூறு ரூபாய் சம்பாதிக்கும் என்னை நம்பிக் கடன் கொடுக்க எவரும் இல்லை என்பதே எனக்கு மிகவும் தலை குனிவாக இருந்தது!

"என்னால் உனக்கு ரொம்பக் கஷ்டம். இந்த உதவியை நான் என்றும் மறக்க மாட்டேன் ராமு!"

"நூற்றுக்கு அஞ்சு. ஆறு வட்டி கேட்டார். நான் கடைசியில் மூணுன்னு தீர்த்து இருக்கேன். மாதா மாதம் தவறாமல் வட்டியைக் கட்டிவிடு!"

"மூணு ரூபாயா?" எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

"ப்பூ! ஒவ்வொருத்தனுக்கு ஏழு எட்டுக்குக் கூடக் கடன் கிடைக்க மாட்டேன்கிறது!"

"இல்லே, பேச்சுக்குக் கேட்டேன். ஒண்ணாந்தேதி சம்பளம் வாங்கினதும் கொடுத்துவிட்டு மறு காரியம் பார்க்கிறேன்!"

"அசல் எப்போ தருவாய்ன்னு கேட்டார். ஆறு மாதங்களில் கொடுத்து விடுவார்னு சொல்லியிருக்கேன். முடியுமோன்னோ?"

"கண்டிப்பாக! தலையை அடகு வைத்தாவது வாங்கிக் கொடுத்து விடுகிறேன்."

அதுவரையிலும் என் மீது கருணை காட்டும் தெய்வம் போலக் காட்சியளித்த ராமசாமி தன் தரகுக்குக் கையை நீட்டிக் கண்ணைச் சிமிட்டினான். மறுநாள் கடன் தொகை வந்ததும் தருவதாகச் சொல்லி அனுப்பி வைத்தேன். அவனுக்கு அரை மனசு!

கடன் பணம் கிடைக்கப் போகிறது என்றதுமே என் தலையில் இருந்த பளு கீழே இறக்கப்பட்டது போலத் தோன்றியது. மனத்தில் ஒரு தெம்பும் வந்தது.

உடனே வீட்டில் இருந்த எல்லோரையும் வைத்துக் கொண்டு பொங்கலுக்கு எடுக்க வேண்டிய துணிக்கு ஒரு பட்டியல் தயார் செய்துகொண்டேன்.

முதல் நாளிரவு எல்லாருடைய குறைகளும் நீக்கப்படும் என்று சொன்னதும் மறுநாள் வீட்டில் குதூகலமும் சிரிப்பும் உதய





மாகி விட்டன! என்னிடத்தில் மிருந்த மரியாதை காட்டுகிறார்கள்!

நானே உள்ளே சென்று சமையற்கட்டில் இருந்த காப்பியை எடுத்துக் குடிக்க ஆரம்பித்தபோது, என் மனைவி ''ஐயே! பல் தேய்த்துக் கொண்டாகி விட்டது என்று ஒரு வார்த்தை என்னிடம் சொல்லக் கூடாதா? நான் எடுத்துத் தரமாட்டேனா?'' என்றாள் கொஞ்சலுடன்.

அதற்குள் மூத்த பெண் ''அம்மா, காப்பி ஆறியிருக்கப் போகிறது பார்!'' என்றாள் முற்றத்திலிருந்து கொண்டே.

உண்மையில் என் காப்பி ஆறித்தான் இருந்தது. ஆனால் அன்று என் மனநிலை அதைப் பொருட்படுத்தவில்லையே!

''குறை சொல்லாமலே குடித்து விட்டீர்களே! இன்னிக்கு மழைதான் வரப் போகிறது!'' என்றாள் பத்மா சிரித்துக் கொண்டே! அவள் வயது இன்னும் ஐந்து குறைந்து விட்டது போலத் தோன்றிற்று.

வழக்கம் போலக் கோவிலுக்குப் புறப்பட்டேன்.

''வரும்போது ஏதாவது காய்கறி வாங்கிக் கொண்டு வாருங்கோ, ராத்திரிக்கு!'' என்று பத்மா கால் ரூபாய் நாணயத்தை என்னிடத்தில் கொடுத்தாள்.

''ஏது, உன்னிடத்தில் கூடப் பணம் இருக்கே!''

நேற்று 'பஸ்'ஸுக்குக் கேட்டபோது கையை விரித்துவிட்டாள். நேற்று பரம ஏழை!.... இன்று இன்னும் எட்டு மணி நேரத்தில் பணக்காரன் ஆகப் போகிறேனே! அந்த ரசவாத வித்தை செய்யும் விந்தை!

''ஆமாம்; பாங்கிலே போட்டு வச்சிருந்தேன். எடுத்துக் கொடுத்தேன்!'' என்று ஓரக் கண்ணால் பார்த்துக் கொண்டே அவள் சொன்னாள்.

அதை வாங்கிப் பையில் போட்டுக் கொண்டு கோயிலை நோக்கிப் புறப்பட்டேன். பணம் கிடைக்கப் போகிறது என்ற மகிழ்ச்சியில் நடையில்தான் எத்தனை வேகம்! துள்ளல்!

ஆண்டவனுடைய சந்நிதிக்கு வந்தேன். ஒரே சமயத்தில் அம்மையும் அப்பனும் காட்சி தரும் காணக் கிடைக்காத கோலம்! வலதுபுறத்தில் கபாலியினுடைய மேற்குப் பார்த்த சந்நிதி; நேரே கற்பகாம்பாள் சேவை தெற்கு நோக்கி. கொண்ட கணவன் கப்பரையைக் கையில் ஏந்திக் கொண்டு கண்ட இடங்களுக்கெல்லாம் பிச்சைக்கு நிற்க, அவன் மனைவி கற்பகத் தருவாய்க் கேட்பார் கேட்டதையெல்லாம் அளிக்கும் அற்புதத்தை நினைத்துக்கொண்டே தண்டனிட்டுவிட்டு நகர்ந்தேன்.

சனீசுவர பகவான் கோயிலுக்குப் பக்கத்தில் வழக்கம் போலக் 'கைநீட்டுகிறவர்கள்' நின்று கொண்டிருந்தார்கள். யார் இருந்தாலும் யார் இல்லாவிட்டாலும் அந்த ஒரு பிச்சைக்காரனை மட்டும் காண நான் தவறியதேயில்லை. எள்ளும் அரிசியும் கலந்தது போல, நரையுடன் கருத்த தாடி, எண்ணெய் கண்டு யுகம் ஆன பரட்டைத் தலைமயிர்; அகன்ற நெற்றி முழுதும் பூசிய பொடி விபூதிப் பூச்சுக்கு நடுவே பெரிய குங்குமப் பொட்டு. இடுப்பில் நாலு முழக் கந்தை. வயிறு காய்ந்து ஒட்டிக் கிடக்க, முகத்தில் வறுமை கோலமிட்டிருந்தது. வாய் ஏதோ பாடலை ஒரே ராகத்துடன் பாடிக் கொண்டிருந்தது.

அதற்கு முன்னும் எத்தனையோ நாட்கள் அவனைப் பார்த்திருக்கிறேன்; அதே நிலை; அதே இடம்; அதே கோலம்! அதே குரலில் அதே பாட்டு! எவராவது அருகில் வந்தால் 'சாமி பரதேசிக்கு ஒரு ரெண்டு நயா பைசா போடுங்க, சாமி! புண்ணியம் உங்களுக்கு!' என்பான். நான் இல்லை என்பதற்கு அறிகுறியாகத் தலையை ஆட்டிவிட்டு நடப்பேன். ஆனால் அடுத்த நாளும் அவன் கேட்கத் தவறமாட்டான்.

அன்றும் அவன் வழக்கம்போலக் கையை நீட்டிக் கேட்டான். ஏதோ ஓர் உள்ளுணர்வு உந்தியது. அடுத்த நிமிஷம் பையிலிருந்த நாலணா நாணயத்தை இடது கையால் எடுத்து அலட்சியமாக அவனிடத்தில் எறிந்தேன் — பெரிய பணக்கார பாவனை தோன்ற; அந்தப் பணத்தை வீசிவிட்டு வெகு மிடுக்காக நடந்தபோது என் தலை கழுத்தில் நிற்கவில்லை!

ஆனால் வீட்டை நெருங்க நெருங்க நடையின் வேகம் குறைந்தது. உள்ளம் குழம்ப ஆரம்பித்தது. வீட்டில் பத்மா கேட்டால் என்ன பதில் சொல்வது என்பதில் மூளை தீவிரமாக ஈடுபட்டது. பரீட்சை ஹாலில் உட்கார்ந்திருக்கும் மாணவன்கூடக் கடினமான கேள்விக்கு விடை காண அவ்வளவு தீவிரமாகச் சிந்தித்திருக்க மாட்டான்!

வீடும் வந்துவிட்டது! பிரச்னை தீரவில்லை. வாசலிலேயே ஐந்து நிமிஷங்கள் நின்று பார்த்தேன். கஷ்டமான காலத்தில்தான் மூளை வேலை செய்யாதே!



உள்ளே போனதும் முதல் கேள்வியாகப் பத்மா 'கீரை இல்லையா?' என்று கேட்டாள்.

"இருந்தது; ஆனால் வாடி வதங்கியிருந்தது; அதனால் வாங்கவில்லை. சாயந்தரம் வர்றபோது வாங்கிக்கொண்டு வருகிறேன்" என்று சொல்லித் தப்பித்துக் கொண்டேன்.

அவளுக்கும் பொங்கலுக்கு ஒரு நார்ப் பட்டுப் புடவை வாங்கப் போகிறேன் என்கிற மகிழ்ச்சியில் நான் கொடுத்த நாலணாவைப் பற்றிக் கேட்கவில்லை.

ராமசாமி சொன்னபடியே மாலை ஏழரை மணிக்கு மேல் எனக்குக் கடன் கொடுக்கும் நண்பர் வீட்டைத் தேடிப் புறப்பட்டேன். அவர் என்னை மதிக்கவேண்டும் என்பதற்காகச் சலவைச் சட்டையையும் வேட்டியையும் அணிந்தேன். முகத்தில் புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டேன்.

நண்பருடைய வீட்டை அடைந்தபோது மணி எட்டு இருக்கும்; ஒரு சந்துக்குள் இருந்தது; வீட்டின் வாசற்புறத்தில் ஒரு பையன் உட்கார்ந்திருந்தான். என்னைக் கண்டதும் எழுந்து வந்து "யாரைப் பார்க்கிறீங்க?" என்று கேட்டான்.

என் பெயரைக் கூறி ராமசாமி அனுப்பியதாகச் சொன்னேன்.

"உள்ளே வந்து உட்காருங்க!" என்று அழைத்துப் போய் ஒரு சோபாவில் உட்கார வைத்தான்.

அந்த அறை சிறியதாக இருந்தாலும் மிகுந்த கவர்ச்சிகரமாக இருந்தது. சுவர்களில் எள்ளத்தனை அழுக்குக்கூட இல்லை. கண்ணுக்கினிய இளம் பச்சை நிறம் பூசப்பட்டிருந்தது. ஒருபுறத்தில் இருந்து காற்றில் அலை அலையாக வரும் ஊதுவத்தியின் புகை உள்ளத்தைக் கிறங்க வைத்தது. 'வாழைத்தண்டு விளக்கின் ஒளி குளிர்ச்சியாகவே இருந்தது. வீட்டுக்காரர் 'எம்மதமும் சம்மதமே' என்ற கொள்கை உடையவர் என்பதைக் காட்டுவதுபோல் திருப்பதி வேங்கடாசலப் பெருமானின் நின்ற கோலத்தில் ஒரு படமும், ஆறுமுகப் பெருமான் கோல மயிலின்மீது கம்பீரமாக அமர்ந்திருக்கிற படமொன்றும் சுவரில் மாட்டப்பட்டிருந்தன. கிழே கண்ணாடி போல் வழ வழவென்று பூசப்பட்ட சிவப்பு செமிண்டு தரையில் விளக்கின் ஒளி பிரதிபலித்தது.

அந்த அறையை அடுத்த கூடத்தில்தான் என் 'கருணை வள்ளல்' அமர்ந்திருப்பார் போலத் தோன்றியது. பையன் அவரிடம் போய் ஏதோ முணுமுணுத்ததும் 'இதோ வர்றேன்னு சொல்லு' என்று அவர் கூறும் குரல் கேட்டது.

குரலில் ஒரு கடுமையும் கண்டிப்பும் தொனித்தன. எவ்வளவோ ஆசையுடன் வந்திருக்கிறேமே; ஏதாவது காரணம்சொல்லி இல்லை என்று சொல்லிவிடப் போகிறாரே என இதயம் திக் திக்கென்று அடித்துக்கொண்டது. அவருக்கு நம்பிக்கை உண்டாக்க வேண்டுமே என்று சட்டையை இழுத்து விட்டுக்கொண்டேன். அவர் ஏதாவது சாக்குப் போக்குகள் சொல்லித் தட்டிக் கழிக்க முற்பட்டால் அதற்கு எதிராக வாதாடி வெற்றி பெற மூளையைத் துருவிக் கொண்டிருந்தேன்.

காலடிச் சத்தம் கேட்டது. திரையை விலக்கிக்கொண்டு அவர் வந்தார். நான் மரியாதைக்கு நாற்காலியிலிருந்து எழுந்து நின்றேன்.

"உட்காருங்கள், உட்காருங்கள்!" என்று அவர் சொல்லிக் கொண்டே எனக்கு எதிரில் நாற்காலியில் உட்கார்ந்தார்.

அவர் முகத்தைப் பார்த்ததுமே அவரை எங்கேயோ பார்த்த ஞாபகம் வந்தது. தலை அழகாக வாரப்பட்டு நாடகத்தில் வரும் ராஜபார்ட்'டுக்காரர் போல் பின்புறம் தொங்கிக் கொண்டிருந்தது. தாடியும் மீசையும் அவர் முகத்துக்கு ஓர் அலாதி அழகைக் கொடுத்தன. நெற்றியில் இலேசாகப் பூசப்பட்ட திருநீற்றின் மீது நயா பைசா அளவு ஜவ்வாதுப் பொட்டு; நல்ல உயர்ந்த 'சில்க்' ஜிப்பா; திறந்த கழுத்தின் வழியாக அழுத்தமான தங்கச் சங்கிலி மின்னியது; இரண்டு கைகளிலும் மோதிரங்கள் 'பளிச் பளிச்' சென்ற வர்ணங்களை வாரி வீசின; தங்க பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடி.

அவரைப் பார்த்துக் கொண்டிருந்தாலும் மூளை வெகு வேகமாக இவரை எங்கு அடிக்கடி பார்த்திருக்கிறோம், இவர் யாராக இருக்கக் கூடும் என்று அசை போட்டுக் கொண்டிருந்தது. காப்பி கிளப்பிலா.... பீச்சிலா?... தபாலாபீஸிலா?...

ஞாபகம் வரவில்லை. தொண்டைக்குள் இருக்கும் பெயர் சில சமயங்களில் வாய்க்கு வராதே, அம்மாதிரி உள்ளம் அறிந்த அந்த உருவம் மூளைக்குப் புரியவில்லை.

"ராமஸ்வாமி ஸொன்னார் உங்களைப்பத்தி...; உங்க பேரு என்ன?...."

அவர் கேட்கும்போது அவருடைய தாடி ஒரு முறை காற்றில் பறந்தது.

அடுத்த நிமிஷம் என் மூளையில் ஒரு மின்னல் வெட்டிற்று. ஆம்...அவர் கோவில் பிச்சைக்காரனேதான்! காலையில் நான் எவனுக்கு நாலணா நாணயத்தை எடுத்து வெகு அலட்சியமாக எறிந்தேனோ, அவனேதான்! சந்தேகமே யில்லை!

எனக்கு மூச்சுத் திணறியது! அந்த அறையே சுழல்வது போலிருந்தது. உள்ளத்தில் விவரிக்க முடியாத அருவருப்பு!

மானத்தை விற்றுக் கையேந்தும் பிச்சைக்காரனிடமா நான் கடன் வாங்க வந்திருக்கிறேன்! பெரு வியாதி கண்ட ஒரு பெண் அணைக்க வருவது போல் உடம்பு சிலிர்த்தது!

'இதோ வருகிறேன்!' என்று கூறிவிட்டு அங்கிருந்து பிடித்த ஓட்டம் வீட்டில் வந்து தான் நின்றேன்.

என் மனைவியும் குழந்தைகளும் பொங்கலுக்குப் புத்தாடைகள் அணியாமலிருக்கலாம்; என் மனைவி என்மீது இன்னும் நூறு கண்டனங்கள் எழுப்பலாம்; குழந்தைகள் என் ஆற்றாமைக்குக் கண் கலங்கலாம்! ஆனால் பிச்சைக்காரனிடம் போய்க் கடன் வாங்குவது போன்ற ஓர் இழிவு ஏற்படாதல்லவா? என் மானத்தின் விலை போகாதல்லவா? அது போதும்; அது போதும்!

எல்லோருக்கும் எல்லா இடங்களிலும்
பரவலான பாங்க் சேவை



# தங்கைக்குத்
# அண்ணனின் சீர்

"அண்ணன் அரங்கத்தான் ஆலவாய்
அண்ணலுக்கு அவளை முடித்தான்;
எண்ணிலாத சீர்வகையும் இன்றுயிர்த்
தங்கைக்கு அவன் ஈந்தான்."

15-2-1965 அன்று

ஸ்ரீரங்கம் ஜனோபகார வங்கி
பாங்க் ஆப் மதுரையுடன் இணைந்தது.
இதனால் இரு பாங்கிகளின் வசதிகளும்
ஒன்று சேர்ந்து மேலும் பரவலான
பாங்க் சேவை எல்லாவிடங்களிலும்
கிடைக்கிறது.



*இனி ஸ்ரீரங்கம் ஜனோபகார வங்கி
பாங்க் ஆப் மதுரையின் ஸ்ரீரங்கம் கிளையாக
செயலாற்றும்.*

## பாங்க் ஆப் மதுரை லிட்.

பதிவு செய்யப்பட்ட அலுவலகம்: மதுரை

சென்னை கிளைகள்

10, [illegible] & 49/1, [illegible]

கருமுத்து தியாகராசன்
தலைவர்

T. K. ராமசுப்பிரமணியம்
காரியதரிசி



# சபாஷ் சென்னை!

குண்டுமணி

சென்னையில் போலீஸ்காரர் மனமுவந்து அவர் கையில் துப்பாக்கியைக் கொடுத்தார். அந்த மனிதர் 'டப்! டப்!' என்று இரண்டு தடவை சுட்டதும் எட்டுப் பேர்கள் வெகு வேகமாக விழுந்தடித்தபடி ஓடினார்கள். அப்படி விரைவாக ஓடியவர்களில் முதலில், இரண்டாவது வந்தவர்களுக்குத் தங்கம் வெள்ளிப் பதக்கங்கள் கிடைத்தன.

'இதென்ன அதிசயம்? இப்படியும் நிகழுமா?' என்று கேட்கிறீர்களா? சென்னை ராஜரத்தினம் ஸ்டேடியத்தில் 9ந் தேதியிலிருந்து 11ந் தேதிவரை நடந்த பதினைந்தாவது தபால், தந்தி இலாகாவின் அகில இந்திய விளையாட்டுப் போட்டியில்தான் இந்த நிகழ்ச்சியைக் கண்டோம்.

தபால்காரர் ஒருவர் தம் சதாபிஷேகத்தை விமரிசையாகக் கொண்டாடினார். இந்த வயதிலும் அவருக்கு உடல் கட்டும், பல மைல்கள் நடக்கும் தெம்பும் இருப்பதைக் கண்டு பலர் வியந்தனர். ஒருவர் அவரிடம் தம் வியப்பை வெளிப்படையாகத் தெரியப்படுத்தவே, அதற்கான இரகசியத்தை விண்டு கூறினார். ''நானும் என் மனைவியும் மணந்து அறுபது வருஷங்கள் ஆகின்றன. எங்கள் திருமணத்தின்போது ஓர் உடன்படிக்கை செய்து கொண்டோம். ஒருவருக்கொருவர் வாக்குவாதம், சண்டை எழும் போது சண்டையைத் தவிர்க்க நான் வீட்டை விட்டு நெடுந்தூரம் விடுவிடுவென்று நடந்து செல்வேன். கோபம் போகப் போகத் தணிந்து விடும். வீடு திரும்புவேன். போதாக் குறைக்கு எனக்குத் தபால்காரர் வேலை கிட்டியது. நான் வாழ்நாளில் பல வருஷங்கள் நடைப் பயணத்திலேயே கழிக்கும்படியாயிற்று!'' என்று சிரித்துக் கொண்டே கூறினாராம்.

தபால் இலாகாவினருக்கும் நீண்ட நடைப் பயணத்துக்குமுள்ள உறவினாலோ என்னவோ நீண்ட நடைப் போட்டி விசேஷ நிகழ்ச்சியாக இருந்தது. சுமார் ஐந்து மைல் சுற்றளவுக்கு மேல் இருபத்திரண்டு சுற்றுக்கள் மைதானத்தில் நடைப் பயணக்காரர்கள் 'விசுக் விசுக்' என்று நடக்கத் தொடங்கினர். தாம் முதலில் வரவேண்டும் என்று விரும்பிய சில நடைப் பயணக்காரர்கள் ஓட்டத்தைக் கையாண்ட போது அவரை நடுவர்கள் மைதானத்தை விட்டு விலக்கினர்.

''ஸார்! முப்பது எண்ணுள்ள அந்த நடைப் பயணக்காரர்தான் வெற்றி பெறுவார் போல் இருக்கிறது. அவர் நூற்றைந்து நம்பர்க்காரரை முன்னேற விடாமல் பார்த்துக் கொண்டு எவ்வளவு சொகுசாகச் செல்கிறார், பார்த்தீர்களா?'' என்று கேட்டார் அருகிலிருந்தவர்.

''முப்பது எண்ணுள்ளவர் வெற்றி பெற்று விடுவார் என்று நினைக்கிறீர்களா? அவர் நூற்றைந்து எண்ணுள்ளவரைவிட இரண்டு சுற்று குறைவாகத்தான் சுற்றியுள்ளார். ஆனாலும் அவரை முன்னேற விடாமல்

1. 'காமிராவும் கையு'மாக அனைவரையும் வரவேற்ற ரூபம்! 2. நண்டுசிண்டுகளை ஓடி ஓடிப் பிடித்து ஆசனங்களில் அமர்த்தி மைதானத்தில் ஒழுங்கை நிலைநாட்டிய மார்ஷல்! 3. கிளியோபாட்ரா அல்ல; ஷட்டில்காக் ஆட்டக்காரி. 4. பையும் கையுமாக நிகழ்ச்சிகளை நேரப்படி நடத்திவைத்த காரியதரிசிகளில் ஒருவரான ஆர்.பி. சுப்பிரமணியம். 5. 'லவ் ஆல்!' என்று கூறி சேர்க்கிறார் அம்பயர்! 6. 'பளார், பளார்!' என்று அடித்து ஷட்டில்காக் பந்தை அலற அடித்த மணி.



> கல்
> தடுக்கினால்
> அபசகுனம்;
> சைக்கிள்
> தடுக்கினால்
> முதல் பரிசு!




7. உருண்டு புரண்டாலும் சைக்கிளில் சிங்குக்கே வெற்றி. 8. இரண்டாம் பரிசுகளானாலும் என்ன, பல பரிசுகளைப் பெற்ற பிரமீளா. 10. கண்டிப்பு அம்பயரானாலும் ஆட்டம் தெரிந்த புள்ளி. 11. தலையாசிரியர்தான்; ஷட்டில்காக் ஆட்டத்திலும் தலையானவர்தான்.

தடுத்து முப்பதுப் பேர்வழி முதலில் செல்வது வேடிக்கைதான்!''

''வேடிக்கை மட்டுமில்லை. நம்மையும் தாம் முதலில் வருவதுபோல் அவர் மயக்கி விட்டாரே!''

''சரியான தமாஷ்தான்! நம்பர் முப்பதுப் பேர்வழி தோற்றாலும் முதல் பரிசுக்காரரை முன்னேற விடாமல் முதலில் தாம் சென்றோமே என்ற திருப்தி அவருக்கு இருக்கலாம்!''

'சகுனம் பார்த்துப்போ! கல் தடுக்கப் போகிறது!' என்று நல்ல காரியத்துக்குப் போகிறவர்களைப் பெரியவர்கள் எச்சரித்து அனுப்புவார்கள். சைக்கிள் பந்தயத்தில் கலந்து கொண்ட பஞ்சாப் அக்ப சிங் போகும்போதே சைக்கிள் தடுக்கிக் கீழே உருண்டார். உடனே அவருக்கு முதல் சிகிச்சை செய்தார்கள். இந்தக் கைக்கட்டுகளோடும் விடாது போட்டியில் கலந்து கொண்ட அக்ப சிங் சைக்கிள் போட்டியில் முதல் பரிசைத் தட்டிக் கொண்டார். 'கல் தடுக்கினால் அபசகுனம்; சைக்கிள் தடுக்கினால் முதல் பரிசு' என்று புதுமொழியை உருவாக்கிவிட்டார் அவர்!

ஃ ஃ ஃ

கால் பந்தாட்டத்திலும், ஹாக்கியிலும் தெற்குப் பிராந்தியமே வெற்றி வாகை சூடியது. சென்னை ஒய். எம். சி. ஏ. மைதானத்தில் மேற்கத்தியப் பிரிவுக்கும் வடக்குப் பிரிவுக்கும் நிகழ்ந்த 'கபாடி' ஆட்டம் விறுவிறுப்போடு ரசிகர்களைப் பெரிதும் கவர்ந்தது. 'கபாடி! கபாடி!' என்று ஆட்டக்காரர்கள் எதிர்த்த கோஷ்டியினரைத் தொட, மூச்சு விடாமல் 'காவடி' எடுத்துச் செல்வதும், நாலைந்து பேர்கள் அவரைக் கோட்டைத் தொட விடாமல் 'லபக்'கென்று அமுக்கிப் பிடித்து வளைப்பதும் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தன. இந்தச் சடுகுடு ஆட்டத்தில் 'நடுவர்'களாகப் பணி புரிந்த திரு கோபிநாத்துக்கும், பார்த்திபனுக்கும் ஆட்டத்தைச் சமாளிப்பது மிகக் கஷ்டமாகத்தான் இருந்தது. 'நடுவர்'கள் கூறிய முடிவுகளை யெல்லாம் 'கேள்விக் குறி' எழுப்பி ஆட்டத்துக்குத் தடங்கல் ஏற்படுத்தினர் வடக்கத்தியப் பிரிவைச் சேர்ந்தவர்கள். அப்படிக் காவடி எடுத்தாவது 'கபாடி'யில் ஜெயித்து விடலாம் என்று அவர்கள் கனவு கண்டார்களோ என்னவோ? ஆனால் தப்பாட்டம் ஆடாமல் இணைந்து ஆடிய மேற்கத்திய கோஷ்டியினரின் பக்கம் முதலில் தோல்வியுறுவது போல் தோன்றினாலும் கடைசியில் வெற்றித் தேவதை அவர்கள் பக்கமே சாய்ந்தாள். 'மூச்சை' விட்டுக் கத்திப் 'பேச்சு'க்கு ஆளானவர்களான வடக்குப் பிராந்தியத்தினர் நல்ல ஆட்டக்காரர்களாக இருந்தும் ஆட்டத்தில் 'ஒழுக்கம்' தவறி நடந்ததால் தோல்வி தானே வந்தடைந்தது.

ஃ ஃ ஃ

ராஜரத்தினம் ஸ்டேடியத்தில் அன்று ஓட்டப் பந்தயங்களும், பளுவான குண்டு வீச்சுப் பந்தயமும் நடந்து கொண்டிருந்தன.

ஒருவர் திடீரென்று, ''அதோ, லோபோ! லோபோ! பாரும்!'' என்று கத்தினார்.

''எதற்கு ஐயா 'லபோ லபோ'ன்னு அடிச்சிக்கிறீர்? லோபோ படம் எல்பின்ஸ்டன் தியேட்டரில் அல்லவா ஓடுகிறது! இங்கே

15. சாதுவானாலும் ஷட்டில்காக்கில் செல்வராஜ் சூரர். 16. உடல் கனத்தாலும், விளையாட்டுக்களில் ஓடக் களைக்காத 'லோபோ' தான் இவர்!






**நீண்ட நடைப் பயணப் போட்டி மயக்கம்!**

விளையாட்டைப் பாரும்! வீராங்கனைகள் பளுவான குண்டை விட்டெறியும் **(Shot Put)** அழகைப் பாரும்!''

''சுவாமி! நானும் அதைத்தான் சொல்லுறேன். இப்பொழுது பளுவான குண்டை எறியும் அந்த வாட்ட சாட்டமான பெண் பம்பாய் ஆட்டக்காரி லோபோ. அவர் ஓட்டப் பந்தயத்திலும் கெட்டிக்காரியாம்!''

''அவளுக்குப் பளு குண்டை விட்டெறியும் போட்டியில் இரண்டாம் பரிசுதான்! சென்னை டெலிபோன்ஸைச் சேர்ந்த மிஸ் ஆர். டி. இந்திராவுக்கல்லவா முதல் பரிசு?''

''அவருக்கு விளையாட்டுக் கலை கூடம் போடு பிறந்தது. அதிகதூரம் குத்துக் கம்பு **(Javelin Throw)**, தட்டு **(Discus Throw)** எறிவதிலும் அவருக்குத்தானே முதல் பரிசு?''

''நமக்கு இந்தப் பசி வேளைக்கு யாராவது டிபன் தட்டை எறிந்தால் நன்றாயிருக்கும்! வெறும் தட்டுக்களல்லவா வந்து விழுகின்றன!'' என்று அங்கலாய்த்தார் ஒருவர்.

''ஷட்டில்காக் பந்து அடித்து விழுமிற அழகைப் பார்த்தால் பசியை மறந்துவிடுவீர். மேற்கத்தியப் பிரிவு தலைமையாளரிடமும், மணியிடமுந்தான் ஆட்டம் பிரமாதம்!''

''சுவாமி! ஷட்டில்காக் பந்தாட்டத்தில் குமாரி இந்திரா 'டிரிபிள் ரைவுன்' பெற்று விட்டாராமே?''

''ஆமாம்! தனியர் ஆட்டத்திலும், குமாரி பிரமீளாவுடன் இரட்டையர் ஆட்டத்திலும், செல்வராஜுடன்கூட 'மிக்ஸட் டபிள்ஸி'லும் இவருக்கே மூன்று தங்கப் பதக்கங்கள் கிடைத்தன. அபார சாதனை!''

''வெற்றி வீராங்கனை இந்திரா போலவே டேபிள் டென்னிஸ் ஆட்டத்தில் ஸ்ரீமதி சகுந்தலா வாக 'டிரிபிள் கிரவுன்' பதக்கங்கள் பெற்றுச் 'சபாஷ் சென்னை' என்ற புகழைத் தேடித் தந்திருக்கிறார்!''

சென்னை ராஜரத்தினம் ஸ்டேடியத்திலும், ஒய். எம். ஸி. ஏ. மைதானத்திலும், இந்தியன் இன்ஸ்டிட்யூட் அரங்கிலும் நிகழ்ந்த விளையாட்டுப் போட்டிகளில் இந்தியாவில் உள்ள பதினொன்று ராஜ்ய தபால் தந்தி விளையாட்டுக்காரர்களுமே கலந்து கொண்டனர். விளையாட்டுப் போட்டிகளில் சென்னைப் பிரிவே பெண்களுக்கான போட்டிகளில் மற்ற ராஜ்யங்களைவிட அதிக எண்ணிக்கை எடுத்தது பாராட்டுக்குரிய அம்சம்.

மைசூர் ராஜ்யத்தைச் சேர்ந்த லோகநாதன் நானூறு, எண்ணூறு, ஆயிரத்தைந்நூறு மீட்டர் போட்டிகளில் தங்கப் பதக்கங்கள் பெற்று 'சாம்பியன்' பட்டத்தைப் பெற்றார். பெண்கள் 'சாம்பியன்' பட்டம் இரட்டையருக்குக் கிடைத்தது. சென்னை இந்திராவும் பம்பாய் குமாரி தேவதாஸும் தான் அந்த இரட்டையர்கள்! அதனால் தங்கப் பதக்கங்களும் இரட்டித்து விட்டன.

சென்னை மியூஸியம் நூற்றாண்டு மண்டபத்தில் தபால் தந்தி இலாகாவினரின் கலை, சித்திரக் காட்சி கண்ணுக்கு விருந்தாக இருந்தது. சங்கீதக் கலையிலும், நடனக் கலையிலும் தேர்ந்தவர்களுக்கான போட்டிகள் மவுண்ட்ரோட் குழந்தைகள் கலை அரங்கில் நிகழ்ந்தன. இவை யெல்லாம் தபால் தந்தி இலாகாவினர் வெறும் இயந்திரமில்லை, அவர்களுக்குக் கலைகளில் தேர்ச்சி உண்டு என்பதை நிரூபித்தன. காரியதரிசிகள் ஆர். பி. சுப்பிரமணியமும், சேஷாத்திரியும் விளையாட்டுக் கலை விழாக்கள் செவ்வனே நிகழ்வதில் கண்ணும் கருத்துமாக இருந்தனர்.

சென்னை தபால் தந்தி இலாகாவினர் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தினால் மக்கள் அல்லலுறுவதைக் கேட்டதுமே, கடைசி நாள் கோலாகலத்தையும், போட்டிகளையும் நிறுத்தி விட்டது அவர்கள் பெருந்தன்மையை எடுத்துக் காட்டியது.

**12. வாசுவின் தலைக்கட்டு வெறும் கட்டுதான்; அதனால்தானோ அவருக்குச் சைக்கிள் போட்டியில் இரண்டாம் பரிசு! 13. பார்க்கச் சாது, பாய்ந்தால் புலி இந்திரா! 14. 'பேன்ஸி டிரஸ்' பெண்மணி யல்ல; வங்காளப் பிரிவு தபால் நல அதிகாரி!**




சித்திரம் : சாமா

# அதிசயமான புதுமுறை தயாரிப்பு

## பெப்ஸோடெண்டின் அற்புத நுரை உங்கள் பற்களின் வெண்மையை பளிச்சிடச் செய்யும்

எப்படி என்று பாருங்கள்: புது முறைப்படி தயாராகும் பெப்ஸோடெண்டில் மட்டுமே அற்புத நுரையை உண்டுபண்ணும் 'இரியம் ப்ளஸ்' உள்ளது. இந்த அற்புத நுரை பற்களைப் பாழாக்கும் பழுப்பை அகற்றி அவைகளை இயற்கை வெண்மையுடன் பிரகாசிக்கச் செய் கிறது...வாயைச் சுத்தம் செய்வதுடன் பெப்பர்மிண்டின் சுவையையும் அளிக்கிறது.




இந்துஸ்தான் லீவர் லிமிடெட்
இந்தியாவில் தயாரிப்பது

# சிரிக்கவும்

'காலந் தவறாமை' என்ற வழக்கத்தைக் கடைப்பிடிப்பதில் மிகவும் கண்டிப்பானவர்கள் என்று ஆங்கிலேயர்கள் ஒரு காலத்தில் புகழ் பெற்றிருந்தார்கள். இரவு எட்டு மணிக்கு ஒருவர் வீட்டில் விருந்து நடக்கவிருக்கிறது; அதற்கு அழைக்கப்பட்ட விருந்தாளி கடிகாரத்தில் எட்டாவது மணி அடிக்கும்போது ஆஜரா யிராவிட்டால், "ஆளைக் காணோமே!" என்று விருந்தாளி தவிப்பார். இரண்டு மூன்று நிமிஷங்களாகியும் வராவிட்டால் "உடம்பு சரியாய் இல்லையோ, என்னமோ?", "பாவம்! வரும் வழியில் ஏதாவது விபத்துக்காளாகி யிருக்க வேண்டும்!" என்றெல்லாம் பேசிக்கொண்டு கவலைப்படுவார்களாம். ஏனென்றால், அப்படி அசம்பாவிதமாக ஏதாவது நடந்திருந்தாலல்லாது அவர் வராதிருக்க மாட்டார் என்ற எண்ணம்.

8-2-65ந் தேதியன்று காலை, உப ஜனாதிபதி டாக்டர் ஜாகிர் ஹுஸைன் வீட்டுக்குச் சென்றவர்கள் அவரைப் பற்றி இப்படி எல்லாம் கவலைப்பட்டிருக்கக் கூடும். ஏனென்றால் அன்று அவர் வீட்டில் இல்லை. அன்றோ அவரது 69வது பிறந்த தினம். பிறந்த தினத்தைக் கொண்டாடுவதற்காகவும், கழுத்தில் மாலைகள் போட்டுக் கொள்வதற்காகவும் தயாராய், செயற்கைப் புன்னகையுடன் தமது வீட்டில் காங்கிரஸ் பிரமுகர்கள் தயாராகத் தங்கியிருப்பதைப் பார்த்தும், கேட்டும் வழக்கமாகிப் போயிருக்கும் நமக்கு இது வியப்பைத் தரும்.

ஆனால் டாக்டர் ஜாகிர் ஹுஸைன் தம்மைப் பற்றிக் கவலைப்படும்படி விட்டு வைக்கவில்லை.

"என் பிறந்த நாளைப் பற்றி ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கும் நண்பர்களுக்கு வந்தனம். நான் உங்களை வரவேற்பதற்காக வீட்டில் இல்லாமலிருப்பதற்காக வருத்தப்படுகிறேன்" — இப்படி ஒரு செய்தி எழுதி வைத்துவிட்டு வெளியூருக்குச் சென்றுவிட்டு இரவுதான் திரும்பினாராம்.

அவரைப் பாராட்ட வந்தவர்கள் பூமாலைகளை வீட்டில் மாட்டப்பட்டிருந்த அவர் படத்துக்குச் சாத்திவிட்டு, பழங்கள், பரிசுகள் வகையறாக்களைச் சேவகர்களிடம் ஒப்படைத்து விட்டுப் போயிருப்பார்கள் என்று நினைக்கிறேன்.

ஃ ஃ ஃ

ஓர் அம்மாள் தனது உறவினர் ஒருவர் வீட்டுக்குத் துக்கம் கேட்பதற்காகப் போயிருந்தாள். அவள் உறவினரைத் தன் வலது கையால் அணைத்துக் கொண்டே "...என் பிச்சக் கை வாகடியோ..." என்று பிலாக்கணம் பாடிய வண்ணம் பக்கத்திலிருந்த ஒரு சிறிய வெள்ளிப் பாத்திரத்தை இடது கையால் எடுத்துத் தன் இடுப்பில் செருகிக் கொண்டாளாம். இந்தப் பழைய தமிழ் நாட்டுக் கதை, ஆங்கிலத்தில் 'க்ளெப்டோமேனியா' என்கிறார்களே, அதை விளக்குவதாகும். தன்னையறியாமல் திருடுவதைப் பற்றிய உணர்ச்சியைப் பற்றிக் கூறுவது.

நமது தேசத்தில் இப்போது காங்கிரஸ் அதிகாரிகளிடையே இத்தகைய உணர்ச்சி தோன்றியிருக்கிறது என்று நான் சொல்லப் போவதில்லை. கிட்டத்தட்ட இந்த முறையில் அவர்களிடம் 'கோட்டா' உணர்ச்சி ஓர் இயற்கை உணர்ச்சியாக நிலைத்து விட்டிருக்கிறது. பப்ளிக் சர்வீஸ் கமிஷன் நடத்தும் பரீட்சைகளை ஹிந்தியில் எழுத வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படவிருப்பதைப் பற்றிய பிரச்னை எழுந்தபோது ஒரு மந்திரி "ஐ.ஏ.எஸ். போன்ற உத்தியோகங்களுக்கு ராஜ்யவாரி 'கோட்டா' நிர்ணயித்து விடலாம்" என்றார்.

இதற்கு 'கோட்டா மேனியா' என்று சொல்லலாமா?

ஃ ஃ ஃ

கல்லூரிகளும், பள்ளிக்கூடங்களும் சென்ற ஐந்து வார காலமாக மூடிக் கிடக்கின்றன. சாதாரணமாக சனி, ஞாயிறு விடுமுறைக்குப் பிறகு திங்கட்கிழமை பள்ளிக்கூடம் போகும்போது எல்லாம் மறந்துவிட்டிருப்பது போலத் தோன்றுவது சகஜம். இந்த நீண்ட கட்டாய விடுமுறையின்போது உணர்ச்சி, கிளர்ச்சி இவை வசப்பட்டிருந்த மாணவர்களின் மூளைகளில் பள்ளிக்கூடப் பாடங்களைப் பற்றிய ஞாபகசக்தி மரத்துப் போயிருக்கும். இந்த நிலைமையில் மாணவர்களுக்குப் பரீட்சை வைக்கும்போது, பாடப் புத்தகங்களிலிருந்து கேள்விகள் கேட்டால் அவர்கள் எழுத முடியாமல் திணறிப் போவார்கள். ஆகவே புதிய முறையில் பரீட்சை வைக்க ஒரு யோசனை. மாணவர்கள் அத்தனைபேரும் ஒருவர் பாக்கியில்லாமல் சென்ற சில வாரங்களாகத் தினசரிப் பத்திரிகைகளைப் படித்து வந்துகொண்டிருக்கிறார்கள். 'ஹிந்தி எதிர்ப்பு' சம்பந்தமான எல்லா விஷயங்களும் அவர்களுக்குத் தலைகீழ்ப் பாடமாக இருக்கும். ஆகவே, பின்வருமாறு வினாத் தாள் தயாரிக்கலாம்:

**வினாத் தாள்**

1. (ஏ) போலீஸ்காரர்கள் மாணவர்கள்மீது தாராளமாக உபயோகிக்கும் தடியின் நீளம், சுற்றளவு என்ன?

(பி) ஒரு மாணவன் மீது ஒரு போலீஸ்காரர் ஒரு தடியை 25 முறை மட்டுமே பிரயோகம் செய்தார். 26வது முறை பிரயோகிக்காததற்குக் காரணம் (1) தடி உடைந்துவிட்டது (2) போலீஸ்காரரின் கை நோவெடுத்தது (3) மாணவனுக்கு உயிர் போய்விடும் போலிருந்தது. இதில் தகுதியானதாகத் தோன்றும் காரணத்தை எழுதுக.

—என்: ஆர்.

# சிந்திக்கவும்

# நங்கையர் செய்யும் நற்பணிகள்

கோடம்பாக்கம் டிரஸ்ட்புரம் மாதர் சங்கக் கூட்டத்தில் ஒரு நாள் சில மாதர்கள், "நமக்கு வீடுகளில் குடி நீர்க் குழாய் வசதியும், கழிவு நீர்க் குழாய் வசதியும் இல்லை. வீட்டு மனிதர்கள் ஆபீசுக்குப் போய் விடுகிறார்கள். நாமல்லவா இந்தத் தேவைகள் இல்லாமல் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது? இதற்கு நம் மாதர் சங்கத்தினர் ஏதாவது வழி தேடினால் தேவலை!" என்று முறையிட்டார்கள்.

"பெண்களால் ஆகாத காரியமில்லை என்கிறார்கள். நாம் மாதர் சங்கத்திலிருந்து சர்க்காருக்கும், நகரசபைக்கும் தாக்கீதுகள் அனுப்ப வேண்டியதுதான்!" என்று ஒரு பெண்மணி யோசனை கூறினார்.

"சிவப்புநாடா முறை உங்களுக்குத் தெரியாதாக்கும்! உங்கள் கடிதாசுகளையெல்லாம் மலைமலையாகக் கட்டி வைத்து விடுவார்கள். பேப்பருக்கும், இங்குக்கும், நம் நேரத்துக்குந்தான் நஷ்டமாகும்!" என்று அந்த யோசனைக்கு 'வீட்டோ' போட்டார் மற்றொரு மாது.

"அப்படியென்றால் நான் சொல்கிற யோசனையைக் கேட்கிறீர்களா? நாம் ஆண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடி விடுவோம்!" என்றார் மாதர் சங்கக் காரியதரிசி ஸ்ரீமதி சரோஜா ராமச்சந்திரன்.

ஸ்ரீமதி ஜோதி வேங்கடாசலம்



"நம்ம ஆண்டு விழாவுக்கும் இந்தப் பிரச்னைகள் தீர்வதற்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது?" என்று ரசக்கிரிக்கொட்டை போல் ஓர் இளையவள் எழுந்து கேட்டாள்.

"இருடி! நம்ம காரியதரிசி நமக்காக எத்தனையோ நல்ல காரியங்களைச் செய்து வருகிறார். எதுவும் யோசனையில்லாமல் செய்ய மாட்டார். குழந்தைகள் உணவுக்காக ஊரும் உலகமும் அல்லல் பட்டிண்டிருக்கும்போது 'ஹார்லிக்ஸும் அமுலு'ம் நம் வீட்டுக்கு வந்து சேரும்படி, நம் மாதர் சங்க அங்கத்தினர்களுக்கெல்லாம் கிடைக்கும்படி செய்தவராயிற்றே! ஏதாவது யோசனை



ஸ்ரீமதி பத்மா முத்தையா
மாதர் சங்கத் தலைவி

யில்லாமல் ஆண்டு விழா கொண்டாட முடிவு செய்திருக்க மாட்டார்!" என்று மாதர் சங்கத்தின் தலைவி ஸ்ரீமதி பத்மா முத்தையா கூறினார்.

"அப்படியென்றால் அவரது யோசனைதான் என்னவென்று சொல்லி விடட்டுமே?" என்று சில பெண்மணிகள் கேள்விக் கணையைத் தொடுத்தனர்.

"நம் மாதர் சங்கத்து ஆண்டு விழாவை மிக விமரிசையாகக் கொண்டாட ஏற்பாடு செய்து, அதற்குத் தலைமை தாங்க ஒரு மந்திரியை அழைத்து வந்து விடுவோம். நமக்குள்ள பிரச்னைகளையெல்லாம் அவர் முன் பேசித் தீர்த்து விடுவோம்! அப்பவாவது நமக்குப் பலன் கிட்டுகிறதா என்று பார்த்து விடுவோம்!" என்றார் காரியதரிசி ஸ்ரீமதி சரோஜா ராமச்சந்திரன்.

"சரியான யோசனை! ஆண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடி விடலாம். ஆனால் மந்திரி வரவேண்டுமே? கோடம்பாக்கம் புருஷர்கள் சங்கத்தினர் எத்தனையோ தடவை நம் பேட்டைக்கு மந்திரியை அழைத்து வரப் பாடுபடுகிறார்கள். அவர்களால் முடியவில்லை. நாம் வீட்டுக்குள் அடைந்து கிடக்கிறவர்கள். நம்மால் எங்கே மந்திரியைப் போய் அழைத்து வந்துவிட



முடியும்!'' என்று பலத்த முட்டுக்கட்டை போட்டார் ஒரு வயதான அம்மாள்.

''நம் சங்கம் மாதர் சங்கமல்லவா? நம் ஆண்டு விழாவுக்குப் பெண் மந்திரியைத்தான் அழைத்து வர வேண்டும்!'' என்று யோசனை ஒரு மாதிடமிருந்து பிறந்தது.

''கவலைப்படாதீர்கள். சென்னை சுகாதார மந்திரி ஜோதி வேங்கடாசலத்தை நம் ஆண்டு விழாவுக்கு அழைத்து வந்து விடலாம்!'' என்றார் காரியதரிசி சரோஜா ராமச்சந்திரன்.

''மந்திரி ஜோதி வேங்கடாசலத்தை யார் போய் அழைத்து வருவது? அவருக்குத் தெரிந்தவர்கள் யார் இருக்கிறார்கள்?''

''யோசனை சொன்னவளுக்கு அதை நிறைவேற்றத் தெரியாதா? எங்கள் குடும்ப டாக்டர்தான் மந்திரி வீட்டுக்கும் டாக்டர். அவர் வாயிலாக இந்தப் பிரச்னையைத் தீர்த்து விடலாம்!'' என்று காரியதரிசி மிகுந்த யோசனையுடன் அந்தப் புதிருக்கு விடை கூறவே அனைவரும் திருப்தியுடன் கலைந்தனர்.

ஒருவர் தம் கிராமத்துக்குப் பாதை போட வேண்டுமென்று விரும்பினாராம். எத்தனையோ கடிதங்கள் எழுதியும் பலனில்லை. கடைசியில் சாமர்த்தியமாக அவர் ஒரு காரியம் செய்தார். மந்திரிக்குச் சொரிக பிடித்து அவரைத் தம் ஊருக்கு வரவழைத்தார். மந்திரி அந்தக் கிராமத்துக்கு வருகிறார் என்று தெரிந்ததும் உடனே கரடுமுரடான பாதைகளைப் போட்டுச் செப்பனிட்டு விட்டார்கள். அவர் நினைத்த காரியம் பலித்து விட்டது. இந்த யுக்தி, செயலாற்றும் திறன் படைத்த ஸ்ரீமதி சரோஜா ராமச்சந்திரனுக்கும் தெரிந்திருப்பதினால் இந்த வழியைக் கையாண்டார் போலும்.

அன்று இரவு கோடம்பாக்கம் டிரஸ்ட்புரம் மாதர் சங்கத்தினர் தூங்கும்போது மந்திரியை நேரிடையாகத் தங்கள் பேட்டைக்கு வந்து குழாய் வசதியும், கழிநீர்க் குழாய் வசதியும் செய்து தருவதாகக் கனவுகண்டு திருப்திப்பட்டிருக்கலாம்!

கோடம்பாக்கம் டிரஸ்ட்புரம் மாதர் சங்கம் ஸ்ரீமதி அலெக்ஸாண்டர் அவர்களின் தூண்டுதலினால் சமீபத்தில் தான் மறுபடியும் தொடங்கப்பட்டது. இதன் சேவைகளில் ஒன்று வாரத்தில் திங்களன்று ஸ்ரீமதி ராஜேந்திரன் என்ற பெண்மணி மாதர் சங்க அங்கத்தினர்களுக்குப் பலவித பலகாரங்கள் செய்யும் விதத்தை விளக்குவதாகும். இது தவிர மாதர்களுக்காக டென்னிஸ், டேபிள் டென்னிஸ் முதலிய விளையாட்டுக்களும் உண்டு. அவ்வப்பொழுது இம் மாதர் சங்கத்தினர் சுற்றுலா சென்று வருகிறார்கள்.

கோடம்பாக்கம் டிரஸ்ட்புரம் மாதர் சங்கத்தினரின் முதல் ஆசை ஜனவரி மாதம் 28ந் தேதி நிறைவேறியது. சென்னை சுகாதார அமைச்சர் ஸ்ரீமதி ஜோதி வேங்கடாசலத்தின் தலைமையில் முதல் ஆண்டு விழா விமரிசையாக நடந்தேறியது. கெட்டிக்காரக் காரியதரிசி ஸ்ரீமதி சரோஜா ராமச்சந்திரன் தம் பேட்டைக்குத் தேவையானவற்றையெல்லாம் தம் அறிக்கையில் வாசித்தளித்து விட்டார். அதோடு இம்மாதர்சங்கத்தின் நன்கொடையாக நூற்றியொரு ரூபாயைத் தனுஷ்கோடி புயல் கஷ்ட நிவாரணத்துக்கு வழங்கித் தங்கள் சேவை உணர்ச்சியைக் காட்டிக்கொண்டார். இந்த விழாவுக்குச் சுகாதார மந்திரி ஜோதி வேங்கடாசலத்தோடு, முதன் மந்திரியின் புதல்வியாரும் ராஜ்ய சமூகநல சேவை போர்டின் தலைவியுமான ஸ்ரீமதி சரோஜினி வரதப்பனையும் வரவழைத்துத் தங்கள் சங்கம் மேலும் தழைப்பதற்கான சூழ்நிலையை வகுத்தனர்.

தங்களால் சாதிக்க முடியாத காரியத்தை, தம் வீட்டுப் பெண்மணிகள் சாதித்து விட்டதைக் கண்டு அன்று ஆண்கள் அதிசயித்தனராம். இந்தப்பெருமையே கோடம்பாக்கம் டிரஸ்ட்புர மாதர் சங்கத்தைத் தலை நிமிர்ந்து பீடுநடை போடச் செய்யும். 'நம் வீட்டுப் பெண்மணிகள் முயற்சியில், வீட்டுக்கு வீடு குடி தண்ணீர்க் குழாய் வசதி



காரியதரிசி ஸ்ரீமதி சரோஜா ராமச்சந்திரன்

யும், கழிவு நீர்க்குழாய் வசதியுமே கிட்டிவிடும் போலிருக்கிறதே!' என்று ஆண்கள் வியந்து கூறினராம். பெண்கள் மனம் வைத்தால் ஆகாத காரியம் உண்டா? இதைப் பார்த்து மனைவிக்கு அடங்கிய சில கணவன்மார்கள், ''நான் என் மனைவி சொற்படி நடக்கிறேன் என்று பலர் கேலி செய்கிறார்களே, அவர்களால்தானே காரியங்களைச் சாதிக்க முடிகிறது!'' என்று மற்றவர்களிடம் கூறினால் அதில் அதிசயமில்லையல்லவா?

—காமு



சீதாப் பாட்டி விழுந்து விழுந்து படை யல் படைத்துக் கொண்டிருந்தாள். நடு வீட்டில் முன்பு எப்பொழுதோ எடுத்த அவ ளுடைய பேரன் கோபாலரத்தினத்தின் படம் மாட்டப்பட்டிருந்தது. அதற்கு முன்னே, பத்திகளின் புகை மண்டலத்துக்கிடையிலே சாஸ்திரத்துக்கும், சம்பிரதாயத்துக்கும் ஒத்தும், ஒவ்வாமலும் இருக்கும் எத் தனையோ பொருட்கள்: ஊத்தப்பங்கள், ரவா தோசைகள், ரவா லாடுகள், இட்லி, மெது வடைகள் இப்படித் தின்பண்டங்கள். வாழை, ஆப்பிள், சாத்துக்குடி, திராட்சை, அன்னாசி இப்படிப் பழ வகைகள். பம்பரம், கோலிகள், கர்லாக் கட்டைகள் இப்படி அவன் விரும்பிப் பயன்படுத்திய விளையாட்டுப் பொருட்கள். இன்னும் அவனுக்குப் பிடித்த மான உடைகள், அவன் அவாக் கொண்டு போட்டுக் கொள்ளும் தொப்பி, பொத் தான்கள் — இப்படி எந்தப் பாட்டியும், இது வரையில் தன்னுடைய எந்தப் பேரனுக்கும் படைத்திராத அளவுக்குப் படைத்திருந் தாள் சீதாப் பாட்டி.

சீதாப்பாட்டியின் பேரன் கோபால ரத்தினம் சென்ற மாதம்தான் டெல்லிக்குப் புறப்பட்டுப் போனான். அவன்தான் இப் போது ரயிலில் தலையைக் கொடுத்து, தற் கொலை செய்துகொண்டானாம். சீதாப் பாட்டியின் வீட்டில் அமர்ந்து துக்கம் கொண் டிருந்த பலருள் ஒருவர் எனக்குச் சொன்னார்: ''பாவிப் பயல், இங்கே ஓடுவதெல்லாம் ரயி லாகத் தெரியவில்லை ஐயா அவனுக்கு. டில் லிக்குப் போய்த் தன்னுடைய உயிரைக் கொடுத்திருக்கிறான்.''





# டெல்லிக்குப் போன பேரன்

தா.பி.வரதராசன்



''எப்படித் தெரிந்தது? கடிதம் வந்திருந்ததோ?'' என்று கேட்டேன் நான்.

''ஊஹும். தந்தியே கொடுத்திருந்தானய்யா, அவன் மாமன்.....''

''ஓகோ.... எப்போதாம் ?''

''எப்போதாவது. சரியாக இன்றோடு பத்து நாளாகுதய்யா.....''

எனக்கு இந்த அவலமே புலப்படாமல் நேராக மாயவரத்திலிருந்து கும்பகோணத்துக்குப் பஸ் ஏற வேண்டியவன். என்னவோ மன்னார்குடி பஸ் வந்து முன்னே நிற்க, 'சீதாப் பாட்டியைத் தான் பார்த்து ஒரு வாழ்த்தை வாங்கிக் கொண்டு போகலாமே' என்ற எண்ணத்தில் இங்கே வந்து இறங்கினேன். இறங்கின இடத்தில்தான் இப்படி ஓர் அவலச் செய்தி; அதைத் தொடர்ந்து நடக்கும் சடங்குகள்.

சீதாப் பாட்டி வெளியில் வந்து எட்டிப் பார்த்தாள்; நான்தானு அவள் கண்ணில்பட வேண்டும் : ''பாபு, இப்படிக் கொஞ்சம் வாயேன்.''

நான் போய் அவள் முன்னால் நின்றேன்.

''கொஞ்சம் பந்தலடி வரையிலும் போய் வர வேண்டும். ரத்தினத்துக்கு நூலென்றால் அவ்வளவு ஆசைடா. கண்டு கண்டா கால் சட்டையிலே போட்டுக்கிட்டு ஊர் முழுக்க 'ஊட்டி' யடிப்பானே..... உனக்குத் தெரியாதோ.... சுருக்கப் போய் ஓர் இரண்டு கண்டு வாங்கி வந்திடு. நல்லா 'மாஞ்சா' போட்டதாக இருக்கட்டும்.'' — பாட்டியின் கண்களில் கண்ணீர் ததும்பியது.

நான் அவள் பேரன் மேல் வைத்திருந்த அன்புக்காக மனத்துக்குள்ளாகவே இரங்கி, அங்கே வைத்திருந்த சைக்கிளைத் தூக்கிக் கொண்டு விரைந்தேன்.

சீதாப் பாட்டி எனக்கு உறவில்லைதான். ஆனால், அவளுக்குத்தான் என்னிடம் எத்தனை பாசம் ! எப்போது போய் அவள் வாயிற்படி மிதித்தாலும் சரி, வாய் நிறைய, ''வாடா'', ''வாடாப்பா'' என்று வரவேற்புக் கூறுவாள். அடுத்த நொடியே தொடர்ந்து, ''இன்னும் உன் பெண்டாட்டி குளித்துக் கொண்டுதான் இருக்கிறாளோ?'' என்று கேட்பாள்.

நானும் எத்தனையோ முறை என் கவலையை மூடி மறைத்து, ''ஆகா! நன்றாகக் குளித்துக் கொண்டிருக்கிறாள்; கும்பகோணத்தில் தண்ணீருக்கா பஞ்சம்? காவிரி வெள்ளமாக ஓடுகிறதே. தினமும் காலையிலேயே போய்க் குளித்துவிட்டு வந்து விடுகிறாள்'' என்று இளிப்பேன்.

கிழவிக்கு மனத்தின் ஆழம் தெரியும். ''கவலைப்படாதே. ராஜகோபாலன் கருணை காட்டுவான். அடுத்த வருடமே கண்ணன் பிறக்கப் போகிறான்!'' என்று வாழ்த்துவாள்.

அப்படிப்பட்ட ஒரு வாழ்த்தைப் பெற்றுச் செல்லலாமே என்றுதான் ஊரை விட்டுப் புறப்பட்டு ஒரு வாரமாகியும் அங்கே நேரே திரும்பாமல் இங்கே வந்தேன். அப்படி வந்தவனை வாழ்த்தும் என எதிர்பார்த்த வாய் வாழ்த்தவில்லை; அலறியது. ''நான் தான்டா அவனைக் கொன்றேன், பாவி, நான்தான்டா அவனைக் கொன்றேன். ஐயோ! என் பேரன் செத்துப் போயிட்டான்டா, பாபு...'' என்று 'ஓ'வென்று குரலெடுத்து அழுதது. இதற்குப் பிறகும் உடனே அவளிடத்திலே விடைபெற்றுக் கொண்டு எவ்வாறு ஊர் திரும்பி முடியும்?

நான் பந்தலடியில் ஐந்து ரூபாய்க்கு இரண்டு நூற்கண்டுகளை வாங்கிக்கொண்டு வந்து சீதாப் பாட்டியிடம் கொடுத்துவிட்டு, அங்கே வைத்திருந்த படையலைத் திரும்ப ஒரு முறை பார்த்தேன். இதற்குள்ளாகவே அங்கிருந்த பட்டியல் இரண்டு பங்கு வளர்ந்திருந்தது. இரண்டு மூன்று 'பாளைக்' காற்றாடிகள், கத்தரிக்கோல், மீன் கொம்புச் சீப்பு, சிறிய அளவிலான பாக்கெட் கண்ணாடி, இரண்டொரு நடிக நடிகையரின் படங்கள், 'கார்ட்டர்பில்டு'... இவ்வாறாக என்னென்னவோ பொருள்கள். இதுவரையில் எந்த சாஸ்திரத்திலுமே கண்டிராத அளவுக்குப் படைக்கப்பட்டிருந்தன.

நான் அவற்றையெல்லாம் ஒரு கண்ணோட்டம் விட்டுவிட்டு, மெதுவாகத் தலை குனிந்து வெளியேறி அங்கே பரந்த வாயிலில் இட்டுத் திட்டாக அமர்ந்து காலமான கோபாலரத்தினத்தின் பிரதாபங்களைப் பற்றிப் பேசி வியந்தவர்களை அணுகினேன்.

ஒருவர் அப்போதுதான் புதிதாகத் தொடங்கினார்: ''குபேரா கபே விஷயம் தெரியுமோ? அந்த ஹோட்டல் முதலாளியே பெரிய கேடி...''

இடையிலேயே மற்றொருவர் அதைப் பற்றிக் கொண்டார். ''ஆமாம். எனக்குக் கூட நன்றாகத் தெரியும். நான் என் கண்ணால் பார்த்திருக்கிறேன். தினம் தவறாமல் மாலையிலே அந்த ஹோட்டலிலே போய் உட்கார்ந்து கொண்டு குறைந்தது மூன்று ரூபாய்க்குச் சாப்பிடாமல் வெளியேற மாட்டான். யார்? நம்ம கோபால ரத்தினம்தான்...''

''அப்படியா?'' என்று வியந்தேன். ''அது என்ன அவ்வளவுக்குச் சாப்பிடும்படி தீனி?''

''வேறு என்ன, மசால் தோசை, ரவா தோசை, ஊத்தப்பம், ரவாலாடு... பயலால் இவற்றைச் சாப்பிடாமல் இருக்க முடியுமா? நீ பார்க்கவில்லையா? அப்படியே அவற்றைப் படைத்திருக்கிறாளே, கிழவி...''

''ஆமாம், பார்த்தேன். அப்போ தினசரி மூன்று ரூபாய் செலவு செய்வானே, டிபனுக்காக?''

''செலவா....? 'இன்பால்' என்றேன். அவ்வளவுதானே? ஹோட்டலை விட்டு வெளியேறும்போது கல்லாப் பெட்டியிலே ஐயா நாலணாத்தானே கொடுப்பார்...''

''என்ன, என்ன! நாலணாவா...!'' நான் வாயைப் பிளந்தேன்.

''ஆமாமய்யா.. உள்ளே 'சர்வர்'கொடுத்த 'பில்' அப்படியே அவன் பையில் கிடக்கும். அவன் தானே தனியே ஒரு பில் கட்டல்லவா அச்சடித்து வைத்திருந்தான்...!''

எனக்கு ஒரே அதிர்ச்சியாக இருந்தது.

''ஒரு நாள் அந்த முதலாளி சக்கையாகப் பிடித்தெடுத்து விட்டான் ஆளை'' என்றார், அதை முடித்த ஆள் கடைசியில்.

அஜீரணத்தால்
அவஸ்தைப்பட
வேண்டாம்!

# ஹ்யூலெட்ஸ் மிக்சர்

## அருந்தி விரைவில் நிவாரணம் பெறுங்கள்

வேலை மும்மரமும் கவலையும் ஜீரணத்தை பாதிக்கின்றன; பசியை மந்திக்கச்செய்து, தளர்ச்சியூட்டுகின்றன. ஹ்யூலெட்ஸ் மிக்சர் விரைவில் நீடித்த பரிகாரம் அளிக்கிறது. ஹ்யூலெட்ஸ் மிக்சர் வயிற்று உபாதையை விரைவில் போக்கி, நிரந்தரமாக குணமளிக்கிறது. வலியுண்டாக்கும் அமிலங்களை அகற்றி, ஜீரண கோசத்திற்கு அதன் வேலையை சரிவர செய்வதற்கேற்ப பாதுகாப்பளிக்கிறது. ஹ்யூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்றுக் கோளாறுகளுக்கும் கூட சிறந்தது. வயிற்றுப்போக்குக்கு அபினி சேர்த்த ஹ்யூலெட்ஸ் மிக்சர் குணமளிக்கும்.

**ஹ்யூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்கு சிறந்தது.**




C. J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
86 A [illegible] மதராஸ் 3

நான் அந்த ஊரில் குடியிருந்தபோது கோபால ரத்தினத்தைப் பற்றி நன்றாகத் தெரியும். அப்போது அவனுக்கு வயதென்னவோ, ஏழெட்டுத்தான் இருக்கும். அந்த விளையும் பயிரின் பெருமை முளையிலேயே எனக்குப் புலப்பட்ட ஒன்றுதான். அப்போதே ஒரு மொட்டைப் பலகையைக் கத்தியைச் சுழற்றுவது போல் சுழற்றிக் கொண்டு வருவான். பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்குத் திரும்புவதற்குள்ளாகக் குறைந்தது பத்துப் பன்னிரண்டு தகராறுகள் இல்லாமல் திரும்ப மாட்டான்.

தாய் தகப்பனற்ற பிள்ளை; எடுத்து வளர்த்த பாட்டியின் நிழலில் இத்தனை லீலைகளை நடத்திவிட்டு, இன்று 'ஊருக்கு'ப் புறப்பட்டு விட்டான். மிக நல்ல பேரனுக்கு விழுந்து விழுந்து படைக்கிறாள் கிழவி!

அவன் டெல்லிக்குப் போன காரணத்தைக் கூடச் சொன்னார். ஒருவர்: "பயலுக்குப் பாரிவி ஆற்று மணலில் பட்டம் பறக்க விடுவதென்றால் உயிரய்யா... ரம்பம் போல நூலை வைத்துக் கொண்டு எல்லாப் பட்டங்களையும் நொடியிலே அறுத்துத் தள்ளி விடுவானே... அப்படிப்பட்ட நூலுக்கு மாஞ்சாப் போடுவதற்குக் கண்ணாடி கிடைக்கவில்லை பயலுக்கு. பார்த்தான். கிழவி வைத்திருந்தாளல்லவா, வெள்ளெழுத்துக் கண்ணாடியைத் தட்டிக்கொண்டு போய் 'நைய' அரைத்திருக்கிறான். அந்தச் சமயத்திலே கிழவிக்குச் செய்தி எட்டியிருக்கிறது. உடனே ஓடிப் போய்ப் பார்த்து உண்மை தெரிந்து பயலை மாட்டு மாட்டென்று மாட்டியிருக்கிறாள். அதோடு அன்றைக்கே மறைந்தவன்தான். ஒரு வாரம் கழித்துத்தான் டெல்லியிலிருந்த அவன் மாமனிடத்திலேயிருந்து, 'ஊர் வந்து சேர்ந்தான்' என்று கடிதம் வந்தது. அவன் டெல்லிக்குப் போன பிறகு இரண்டு மூன்று முறை கிழவியைப் பார்த்திருக்கிறேன். அப்போதும் அவள் பேரனின் இந்தக் குறும்பைத் தெரிவித்ததே இல்லை. 'டெல்லிக்குப் போயிருக்கிறான்' என்று சுருக்கச் சொல்லியிருக்கிறாள்; அவ்வளவுதான்."

கிழவி வெளியில் வந்து இன்னும் யார் யாரையோ கடைகண்ணிக்கு விரட்டி இன்னும் என்னென்னவோ வாங்கி வரச் சொல்லிக்கொண்டிருந்தாள்.

கிழவி நேரம் கிடைத்த ஒரு நொடி என்னிடத்திலே சொன்னாள்: "இதெல்லாம் சாஸ்திரம், சம்பிரதாயக்கட்ட ஒத்து வருகிறதோ, இல்லையோ, எனக்குத் தெரியாது. அதற்கெல்லாம் ஒத்து வருகிறாற்போல் அவன் மாமன் அங்கே செய்து கொள்ளட்டும்... என் ரத்தினம் என் ஆசையை அழித்துவிட்டான். ஆத்திரத்தை அழிக்க முடிந்ததோ பாவிப் பயலாலே... அது தீருவதற்குத்தான் இப்படியெல்லாம் படைக்கிறேன்... நீங்கள் வெறும் பைத்தியம் என்று வேண்டுமென்றாலும் சொல்லிக் கொள்ளுங்கள். அதனால் கவலையில்லை...." — கிழவி கண் கலங்கியது.

எழுத்தாளர் ஒருவர் தமது முதற் புத்தகத்தைத் தமது மனைவியின் பெயருக்குச் சமர்ப்பணம் செய்து எழுதியதாவது:

"என் செல்லப் பிள்ளையின் அம்மா என்னிடம் கோபித்துக் கொண்டு போகாமல் இருந்தால், இந்த நூலை என்னால் எழுதியிருக்க முடியாது. எனவே, நன்றியறிதலோடு அவளுக்கு இந்த நூலைச் சமர்ப்பிக்கிறேன்."

இதைப் பார்த்துக் கொண்டேயிருந்து என் பக்கத்திலே வந்த ஒருவர் என்னிடத்திலே மெதுவாகச் சொன்னார்: "பார்த்தீர்களா, சார், கிழவியை! எவ்வளவு பாசம் பேரன் மேல். இப்படிப்பட்டவனைப்பற்றி நடு இரவில் வந்து கதவைத் தட்டி, 'பாட்டி சாகக் கிடக்கிறாள், மருந்துக்குப் பணம் வேண்டும்' என்று சொல்லி ஐம்பது ரூபாய் வாங்கிக் கொண்டு போனான், சார்! விடிந்து பார்த்தால் கிழவி உருளைக்கிழங்கு மாதிரி எதிரே வருகிறாள்."

கிழவி எப்படியெப்படியோ மனம் போன போக்கில் எதை எதையோ வாங்கி வைத்துக் கடைசியில் எவ்வாறோ தன் ஆத்திரத்தையெல்லாம் தீர்த்துக் கொண்டாள். என்னுடைய நாள் வீணானதுதான் மீதி எனக்கு. அன்று முழுவதும் அங்கே தங்கியிருந்துவிட்டு அடுத்த நாள் விடியற்காலையே புறப்பட்டுக் கும்பகோணம் வந்து சேர்ந்தேன். வீட்டுக்கு வந்ததுமே, ராஜியை நோக்கி, ஊரை விட்டுப் புறப்பட்டுப் போய் ஒரு வாரத்துக்கு மேல் ஆகிவிட்டதே என்ற ஆதாரத்தில், "ஏதாவது கடிதம் வந்திருந்ததா?" என்றேன்.

அவள் "இல்லை" என்றாள். "ஆனால், கோபாலரத்தினம் வந்திருந்தான்."

"என்ன, கோபாலரத்தினமா? சீதாப் பாட்டியின் பேரனா?" எனக்குக் கொஞ்சம் கூட நம்பிக்கை இல்லை.

"ஆமாம், அவனேதான். ஏன்? எனக்குத் தெரியாதா அவனை? நாம் வெண்ணெய்த் தாழிக்குச் சீதாப் பாட்டி வீட்டுக்குப் போயிருந்தபோது அவன்தானே நம்மோடு கோவிலுக்குத் துணை வந்தான்?"

இதற்கு மேலும் ஐயத்துக்கே இடமில்லை. "உம்.. என்ன சொன்னான்?" என்றேன்.

"பாவம், அவன் பாட்டி இறந்துவிட்டாளாம். அடக்கச் செலவுக்குப் பணம் வேண்டுமென்று ஐம்பது ரூபாய் வாங்கிக் கொண்டு போனான்."

'அட படுபாவி! — டெல்லியிலிருந்து மாமன் பெயரில் தானே ரயிலில் தலையைக் கொடுத்துச் செத்து விட்டதாகத் தந்தி கொடுத்து அவளை அழ வைத்ததல்லாமல், இப்படி வேறல்லவா அவளைச் சாகடித்திருக்கிறான்?' என்று முணுமுணுத்தது என் வாய். ராஜிக்கு ஒன்றுமே விளங்கவில்லை!


ராஜபோகம்-24
அத்தைதான் இதோ இருக்கிறாரே! அது யார்?
எனக்கு
நிறைய அத்தைகள்.
யாருக்கு அத்தை?
அவனுக்கு நான்


இருக்கச் சொல்லி வந்துவிடுகிறேன்.
நானே வந்துவிட்டேன். ராஜாவுக்கு அத்தை நான். என் ராஜா, சௌக்கியமா?


அவனுக்கு மருந்து கொடுத்திருக்கிறேன். இப்போது தொந்தரவு செய்யக்கூடாது. வெளியில் போய்ப் பேசலாம்.


உங்கள் குடும்பத்
சப்தமும்...
எனக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை! நான் ராஜாவின் அத்தை. கந்தசாமி ராஜாவின் தமக்கை...


இவள் எங்கே இங்கே வந்தாள்?
ராஜா இங்கே இருக்கிறான் என்று யாரோ சொன்னார்களாம்! அதைப்பற்றி விசாரிக்க.
அப்படியா! ராஜாவின் சொந்த அத்தை என்று சொல்லிக்கொண்டு வைத்தியசாலைக்கு ஒருத்தி வந்திருக்கிறாள்! டாக்டர் அவளை மயக்கமாகப் படுக்க வைத்திருக்கிறார். பீமா பாய்க்கு இதில் என்ன சிரத்தை?


ராஜா, யோகம் என்ற பெண்ணின் காதலன் போலிருக்கிறது.-இன்னும் ஒரு வாரத்தில் அவன் சொத்துக்கள் அவனிடம் சேர்ப்பித்தாக வேண்டும். அதற்குள் அவன் சம்பந்தத்தை ஒரு விதமாகத் தீர்த்தாக வேண்டும்.


அவளை இப்படிச் செய்து பார்க்கலாமா?
பேஷான யோசனை! அப்படியே செய்துவிடுவோம்...



## திருமணம்

கமலாபுரம் ராமஸ்வாமி அய்யங்கார் பேத்தி சௌ. கனகவல்லிக்கும் ஸ்ரீமுஷ்ணம் ஸ்ரீ ஆர். தேசிகாச்சாரியார் (ரிட்டயர்டு சீப் அகௌன்டண்ட், மின்சார போர்டு, சென்னை) குமாரர் சிரஞ்சீவி பார்த்தசாரதிக்கும் 22-1-65 அன்று உப்பிலியப்பன் கோயிலில் திருமணம் விமரிசையாக நடந்தேறியது.

வாழ்க மணமக்கள் !

## நீண்ட கால அனுபவத்தினால் தயாரிக்கப்பட்டது...




# ட்ரேயான்ஸ் ரேயான் நூல்கள்

இந்தியாவில் முதல் முதலாக சிறந்த ரசாயன முறையில் தயாரிக்கப்பட்ட உன்னத நூல் "ட்ரேயான்ஸ்" ரேயான் நூல்கள் விலை மலிவு, நீண்ட கால உழைப்பு, பகட்டான உடைகளுக்கு ஏற்றது.

"ட்ரேயான்ஸ்" ரேயான் நூல்கள்
100, 120, 150, 300 டினேயர்களில்
தயாரிக்கப்படுகின்றன.

ஸ்டாக்கிஸ்டுகள்

## ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்

61 செம்புதாஸ் தெரு சென்னை 1
போன் 21641 தந்தி CELYARN

கிளைகள்

68/416 மெயின் ரோடு செவ்வாய்ப்பேட்டை சேலம்
போன் 3253 தந்தி CELYARN

114/A தெற்கு மாசி வீதி மதுரை
போன் 2598 தந்தி CELYARN

இந்தியா லைப் பில்டிங் திருச்சிரோடு கோயமுத்தூர்
போன் 4425 தந்தி RAYONS

தன்னையறியாது எங்கோ பறக்கும் உத்வேகம், பிரயாணத்தின் அயர்ச்சி; மனமகிழ்ச்சியின் நிறைவு, பெருமிதத்தின் பேரிரைச்சல்கள்— இத்தனையும் தாங்கியவாறு வீட்டுக்குள் அடி எடுத்து வைத்தேன். முதன் முதலில் என்னைப் பார்த்து விட்டவள் என் மகள் ரூபா தான்.



# துணை

## விமலா ரமணி

"அம்மா."

பிஞ்சுக் கரத்தின் ஸ்பரிசத்தில் என் உணர்வுகள் ஒரு கணம் தள்ளாடின. வாசலில் காத்து நின்ற ஆட்டோ ரிக்ஷாக்காரனுக்கு வாடகை தர வேண்டும் என்ற நினைப்பே பிறகுதான் எழுந்தது எனக்கு. கடமையை முடித்தவள் உள்ளே நுழைந்தேன். என்னுள் ஏனோ ஒரு தயக்கம். நிசப்தமாகக் கிடக்கும் வீட்டின் புதிய சூழ்நிலை. உருப்பெறாத நினைவுகளின் உளைச்சல்கள்!

என்ன நடந்தது? அப்படி என்னதான் நடந்து விட்டது?

இவர் எங்கே?

வழக்கமான வரவேற்பு அல்லவே இது?

பல முறை நான் ரேடியோவில் பாடுவதற்கோ, பேசுவதற்கோ வெளியூர் போவதுண்டு. காலை போனால் மாலை திரும்பி விடுவேன். மழலைச் செல்வம் பிறப்பதற்கு முன் நாங்கள் இருவரும் ஒன்றாகவே செல்வோம். என் 'நிகழ்ச்சி' முடிந்த பிறகு அவர் தரும் பாராட்டுரை இருக்கிறதே! அப்பப்பா! அதற்காகவே அடிக்கடி 'வானொலி'யில் 'ப்ரோக்ராம்' தர மாட்டார்களா என்று இருக்கும்! குழந்தை பிறந்த பிறகு குடும்பச் சூழலையும் கவனித்துக் கொண்டு, குழந்தைக்கும் சிரமம் தராத வகையில்தான் எங்கள் திட்டங்களை உருவாக்கினோம்.

அதாவது — வெளியூர் செல்லும் வாய்ப்பு ஏற்பட்டால் ஒருவர் மற்றவருக்கு உதவியாக இருப்பது என்று. மனைவியின் கடமைதான் குழந்தையைப் பேணுவது என்றாலும், தவிர்க்க முடியாத சில சந்தர்ப்பங்களில் அந்த மனைவிக்கும் கடமைகள் குறுக்கிடும் போது கணவன் குழந்தையை ஒரு சில மணி நேரங்கள் பேணுவது தவறாகாது என்பது எங்கள் கொள்கை.

இது வரை ஒரு 'கீறல்'கூட விழவில்லை இன்று.... இன்று என்ன வந்து விட்டது?

ஏதோ நடந்திருக்கிறது கண்டிப்பாக. நான் பிரிந்த இந்தச் சில மணி நேரங்களில் ஏதோ நடந்திருக்கிறது.

நான் குழந்தையைக் கவனித்தேன்.

வாராத தலையும், அழுக்கு உடையுமாகத் தண்ணீரில் அவள் விஷமம் செய்து கொண்டிருந்தாள்.

என் நெஞ்சு கனத்தது. ஒவ்வொரு தடவையும் இப்படியா நடக்கும்?

என் அன்பு மகளுக்கு அழகாகத் தலைவாரி, புதுச் சட்டை போட்டு விட்டு, நானும் அவ ளுடன் என்னை நோக்கியவாறு அவர் காத்திருப்பாரே !

வந்ததும் வராததுமாக —

"இன்று... 'ஸரோஜ நயனநேத்ரி'—ரொம் பப் பிரமாதம் போ ! சங்கராபரணத்தைப் பிழிந்து விட்டாய் அப்படியே !" என்பாரே!

நான் சிந்தித்தேன்.

"ரூபா... அப்பா எங்கே?"

குழந்தை பரபரப்புடன் விழித்தாள்; பாதி விளையாட்டை நிறுத்த மனமில்லாமல் கையால் தண்ணீரைத் தொட்டுக்கொண்ட வண்ணம், "அப்பாவுக்கு ரொம்பத் தலைவலி யாம்.... கண்ணை மூடிண்டு படுத்திருக்கா.... போய்ப் பார். சீக்கிரம் போம்மா, பாவம்" என்று கூறினாள்.

'பஸ்'ஸில் வந்த அசதியும், ஆயாசமும் பறந்து போயின. நான் காலைக் கழுவிக் கொண்டு படுக்கை அறைக்குள் நுழைந்தேன்.

அவர் இமைகள் படபடத்தன.

அவர் உள்ளம் உறங்கவில்லை என்பதை உணர்ந்தேன்.

ஒரு நொடியில் 'காப்பி' தயாராயிற்று: குழந்தைக்கும் மாற்றுடைகள் அணிவித்து அலங்காரம் செய்தேன்.

அவள் தன் பொம்மைக்குக் கலியாணம் செய்து வைத்துக் கொண்டிருந்தாள் செல வில்லாமல் !

'காப்பி'யின் மணத்துடன் அவர் அருகில் சென்றேன்.

நெற்றியில் என் விரல்கள் பதிந்தன:

அவர் விழிப்பது போல் கண் திறந்தார்:

கண்களில்.....?

தூக்க மயக்கமே இல்லை! எனக்குத் தெரி யாதா ? ரூபா தான் என்னிடம் இரகசிய மாகச் சொன்னாளே.

"யாரோ மத்தியானம் இரண்டு பேர்கள் வந்தாம்மா..... அப்பாவை என்னமோ சொல்லிக் கேலி செஞ்சாம்மா...."

அவர்கள் யாராக இருக்கும்? அவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் கேலி செய் திருக்கும் விஷயம் எனக்குப் புரிந்தது. ஆனால் இவர் இவ்வளவு இடமற்றவர் என்று நான் நினைக்கவில்லை.

"உன்னை வீட்டையும் குழந்தையையும் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டு உன் மனைவி குஷாலாய் ஊர் சுற்றக் கிளம்பி விட்டாளாக்கும்" என்று நண்பர்கள் கேலி செய்திருப்பார்கள்: இருக்கட்டுமே!

"தினம், தினம் என்னையும், வீட்டையும் குழந்தையையும், என் குடும்பத்தின் தேவை களையும் பாதுகாக்கும் என் மனைவிக்காக என்றாவது ஒரு நாள்கூட இந்த உதவி நான் செய்யக் கூடாதா?" என்று கேட்க உர மில்லையா இவர் நெஞ்சிலே ? வாழ்வின் துணை என்று திருமணத்தின்போது ஒன்று சேர்க்கிறார்களே! நுகத்தடியைத் தலையில் வைத்து இன்ப துன்பங்களில் பங்குபெறச் சொல்கிறார்களே! கணவனின் பெருமை மனைவிக்கு உண்டென்றால், மனைவியின் பெருமை கணவனுக்கு இல்லையா? நான் வாயால் எதுவுமே சொல்லவில்லை;

வாழ்க்கை என்பது அழகான நந்தவனம்: அங்கு தென்றல்தான் வீச வேண்டும். புயல் வீசக் கூடாது: பூத்துக் குலுங்கும் மலர்கள் புண்ணாகி விடும்:

அவர் காப்பியை வாங்கி நிதானமாகப் பருகினார்.

என்னிடம் ஒன்றும் கேட்கவில்லை. எதுவும் சொல்லவில்லை. நானும் மௌனமாய் என் கடமைகளைச் செய்தேன்:

'வானொலி' நிலையத்தில் என் பாட்டுக் காகத் தரப்பட்ட சன்மான 'செக்' என் கைப் பைக்குள் முடங்கிக் கிடந்தது:

**ம**று நாள் —

தோட்டத்தின் செடிக்கடியில் என் மகள் குனிந்து குனிந்து எதையோ பார்த்துக் கொண்டிருந்தாள்:

"என்ன செய்கிறாய்?" என்று கேட்டேன் அதட்டலாக:

"தட்டாரப் பூச்சி பிடிக்கிறேம்மா....!"

"பிடித்து — "

"பிடிச்சு ஒரு கையிலே சின்னக் கல்லை வைச்சு 'மாமியார் வீட்டுக்குத் தண்ணி தூக்கு' அப்படீன்னு சொன்னா, உடனே அது அந்தக் கல்லைத் தூக்கும்! உனக்குத் தெரியுமா ?"

பெரிய உலக அதிசயத்தைச் சொல்வது போன்ற பெருமையும், வியப்பும் அவள் வட்டக் கண்ணில் மிதந்தன.

காற்றில் பறந்த மயிர்க் கற்றைகள் அவள் நெற்றியில் விழுந்தன.

காலை இள வெய்யிலின் செவ்வண்ணம் அவள் பிஞ்சு முகத்துக்கு ஒளி கூட்டியது. என்னை மறந்து ஒரு கணம் அந்த லயிப்பில் மூழ்கி விட்டேன்.

'ஸரோஜ நயன நேத்ரம்' — என்பது இதுதானோ ?

"இது என்ன காலை வேளையில் தோட் டத்தில் விளையாட்டா.... ஏய் ரூப்.... கண்ட கண்ட பூச்சியை யெல்லாம் பிடிக்காதே.... போ.... போ.... போய் வாசலிலே யார் வந்திருக்கா பார்.... உம்...."

குழந்தை ஒரு கணம் திகைத்தவள் பின் சமாளித்துக் கொண்டு, "அட, பாம்பே அத்தை.... பாம்பே சித்தி..... ஐய்யா!" என்று கத்திக் கொண்டு வாசலுக்கு ஓடி விட்டாள்:

நான் திரும்பிப் பார்த்தேன்.

என் ஒன்றுவிட்ட நாத்தனார்கள், ஓர்ப் படிகள், அவர்கள் குழந்தைகள்: இரண்டு 'டாக்ஸி'களில் எல்லோரும் — கிட்டத்தட்ட ஏழெட்டுப் பேர்கள் இருக்கும் — இறங் கினார்கள்.

என் கணவரின் கண்ணில் கவ்வியிருந்த பயமும், கவலையும் என் கண்களுக்குத் தப்பவில்லை:

'இறுதிப்'பென்று சொல்லாமல் கொள் ளாமல் இப்படி வந்துவிட்டார்களே! எப்படிச் சமாளிக்கப் போகிறாய்?

அவர் என்னை நோட்டம் பார்த்தாரா?

நான் அயரவில்லை:

"வந்தவர்களை 'வா' என்று சொல்லாமல் இப்படியா கொல்லைப்புறம் வருவார்கள்?"

நான் வாசலுக்கு விரைந்தேன். அவர் பின்தொடரும் ஓசை கேட்டது: பிற்பகல்

# உயர்ந்த ரக எஃகிலிருந்து உயர்ந்த ரக கருவிகள்

உயர்ந்தரக விவசாயக் கருவிகளை ஜம்ஷெட்பூர் 1923-ம் வருஷத்தில் தயாரிக்கத் தொடங்கியபோது, ஒரு புதிய இந்திய தொழிற்சாலை உற்பத்தியாயிற்று என்றே சொல்லலாம். 1925-ம் வருஷத்தில் டாடா கம்பெனியார்கள் அக்ரிகோ தொழிற்சாலையை நடத்தும் பொறுப்பை ஏற்றுக் கொண்டபோது, இந்தியாவிலே முதன்முதலாக சுத்தியல்கள், மண்வெட்டிகள், கடப்பாரைகள், சம்மட்டிகள் போன்ற கருவிகளை உற்பத்தி செய்யத்தொடங்கப்பட்டது.

வயலில் உழுது பயிரிடுபவர்களுக்கும், ரஸ்தாக்கள், ரயில் பாதைகள், பாலங்கள், அணைக்கட்டுகள், முதலியவற்றை அமைத்து பராமரித்துவரும் தொழிலாளிகளுக்கும் அக்ரிகோ கடந்த 40 ஆண்டுகளாக அநேகவித கருவிகளை வழங்குவதிலே உதவியிருக்கிறது.

மிகவும் மேன்மையான எஃகிலிருந்து ஒரே துண்டில் தயாரிக்கப்பட்ட கருவிகள் இப்பொழுது 40 லட்சத்திற்குக் குறைவில்லாமல் அக்ரிகோ தொழிற்சாலையில் உருவாக்கப்படுகின்றன. நாடெங்கும் அக்ரிகோ கருவிகளையே தேர்ந்தெடுக்கிறார்கள் என்றால் அதற்கு அக்கருவிகளின் உயர்ந்த ரகமும் நீடித்த உழைப்பும்தான் காரணம்.

## டாடா ஸ்டீல்



The Tata Iron and Steel Company Limited

IWTTN 2066 A

சாப்பாட்டுக்கும் பிறகு வீடு அமைதியாக இருந்தது: அலுப்பும் சலிப்புமாக அவரவர்கள் சோர்ந்து போய் உறங்கிக் கிடந்தார்கள்: எனக்கும் உடலெல்லாம் ஒரே வலி. நேற்று முழுவதும் 'பஸ்' பயணம்: காலையில் விருந்தினர் உபசாரம் — இடுப்பு முறிந்து விட்டது: ஆயினும் தூக்கம் வரவில்லை: எப்படி வரும்? கடமை உறுத்துகிறதே! அவர் டிபனுக்கு வருவாரே!

நான் தள்ளாடியபடி எழுந்தேன்:

வாசலில் ஸ்கூட்டர் சப்தம் கேட்டது:

நான் அவசரமாக 'ஸ்டவ்வை' மூட்டினேன்:

''உஸ்.... எதற்கு வீணாக அலட்டிக் கொள்கிறாய்: நான் டிபன் வாங்கி வந்து விட்டேன் எல்லோருக்கும்: காப்பி மட்டும் போடு. போதும்.....''

அவர் என் வாயினுள் 'ஜிலேபி'யைத் திணித்தார்: அதன் இனிப்பைவிட அவர் பார்வையின் குளுமையை என்னால் தாங்க முடியவில்லை. என் கண்கள் மூடிக்கொண்டன:

அன்பு என்பது எவ்வளவு பெரிய வலை! அதற்குள் எத்தனை உறவுகள், பாசங்கள், பந்தங்கள், அர்த்தமற்ற சிறு சிணுப்புக்கள்! நான் இதயத்தில் எதையோ தேடினேன்: என்னுள் சிலிர்த்த உணர்வுகளுக்கு அகராதியில் பதவுரை காணவா கிளம்பி விட்டேன்?

ஆபீஸ் செல்லுமுன் அவர் என்னருகே தயங்கியபோது எனக்குப் புரிந்தது. இருந்தும் புரியாதவள் போல் —

''ரேடியோ 'செக்'கை மாற்றவேயில்லையா? மேஜை மீது கையெழுத்துப் போட்டு வைத்திருக்கிறேன். எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று பேசினேன்:

என் தேவையை அவர் உணர்ந்த போது, அவர் தேவை எனக்குத் தெரியாதா?

அவர் கண்கள் பனித்திருந்தது எனக்குத் தெரிந்தது: அதற்குள் — யாரோ வரும் ஓசை கேட்கவே நாங்கள் பிரிந்தோம்.

குற்றம் செய்துவிட்ட உணர்வுடன் அவர் 'செக்'கைச் சுருட்டித் தம் 'பாக்கெட்'டில் போட்டுக் கொண்டபோது என் உள்ளம் நெகிழ்ந்தது: இரவுச் சாப்பாட்டை நிலாச் சாப்பாடாக வைத்துக் கொண்டோம்.

கேலிக்கும், பரிகாசத்துக்கும் இடையே வகை வகையான உணவுத் தினுசுகள் வயிற்றில் சமாதியாயின:

வெள்ளி நிலவின் தண்மையினுள் இதயத்தில் புதிதாகக் குடிப்புகுந்த 'கள்ள' உணர்ச்சியுடன் நான் நடமாடிக் கொண்டிருந்தேன்:

'அவரே தம் மனத்தைத் திறந்து காட்ட வேண்டும்: நான் அறிந்தது அவர் அறியக் கூடாது!'

''அண்ணாவுக்கு என்ன? அதிர்ஷ்டசாலி! மன்னி வீட்டு வேலையிலும் சூரப்புலி: வெளியிலும் பெரிய பாடகி. நம்மைப் போலவா? ஒரு 'சோளி பீஸ்' வாங்க எத்தனை தரம் கணவனுக்குச் 'சோப்' போட வேண்டி யிருக்கிறது?'' என் ஒன்றுவிட்ட நாத்தனார் ஒருத்தியின் விஷமப் பேச்சு!

அவள் கணவன் முகத்தில் அசடு வழியச் சிரித்தான்:

''ஏன்? நீயும் சம்பாதியேன். யார் தடுத்தார்கள்?''

''நன்றாகச் சொன்னீர்கள்: இன்று இப்படிச் சொல்வீர்கள். நாளைக்குத் திமிர், அது இது என்று பேசுவீர்கள்: எல்லோரும் அண்ணாவைப் போல் பரந்த நோக்காக இருக்க முடியுமா? அண்ணாவின் மனத்தைப் போல் கள்ளம் கபடில்லா மனம் எல்லோருக்கும் வருமா?''

இவரை ஓரக் கண்களால் பார்த்தேன்.

அவர் இலையிலுள்ள சாதத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தார்.

''மன்னி!... நீங்கள் இப்படிப் பம்பரமாக வேலை செய்வதால்தான் எங்களுக்குக் கூட வேலை செய்யத் தோன்றுவதே யில்லை. சுகமாகத் தூங்கிக் கொண்டிருக்கிறோம்.'' — இது ஒருத்தி:

இவர் தலை நிமிர்ந்தார்:

''குடும்பப் பெண்கள் வெளி நிகழ்ச்சியில் பங்கு கொள்வதைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?' என்று என் நண்பன் ஒருவன் என்னைக் கேட்டான் அன்று. இன்று அதற்குப் பதில் சொல்கிறேன் — 'கணவனுக்கு ஏற்ற மனைவியாக வாழும் ஒரு பெண் தன் இல்லத்தின் கடமைகளையும் நன்கு நிறைவேற்றிக் கொண்டு பொதுப் பணியிலும் ஈடுபடுவதைப் பற்றி எனக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை.' ஆனால் எல்லோரும் மன்னியைப் போல் வீட்டிலும், வெளியிலும் நல்ல பெயர் வாங்க வேண்டுமே.'' — மைத்துனரின் பாராட்டு!

அப்பப்பா! எத்தனை பாராட்டுக்கள்! அத்தனையும் சரமாரியாக வந்து குவிந்து என்னைத் திக்குமுக்காடச் செய்தன. ஆனால் உள்ளத்துக்குள் புகுந்த 'கள்ளம்' என்னை எள்ளி நகையாடியதே!

நான் பேச வில்லை! இவரோ....?

எல்லாரும் ஊருக்குப் போய் விட்டார்கள்.

கலகலப்பும் குதூகலமும் பொங்கித் ததும்பிய வீடு இப்போது 'வெறிச்'சென்று கிடந்தது: குழந்தை ரூபாவும் இத்தனை நாட்கள் அந்தக்குழந்தைகளுடன் அடித்த கூத்தில் திளைத்தவள் இப்போது ஒடுங்கிக் கிடந்தாள். அமைதியான இந்தப் பழைய சூழ்நிலை எனக்கு என்னவோ போல் இருந்தது.

அன்று —

தபாலில் எனக்கொரு கடிதம் வந்தது.

வெளியூர்க் கச்சேரிக்கு அழைப்பு. நான் சிந்தித்தேன். என் அருகில் — மிக அருகில் அவர் குரல் கேட்டது. ''சம்மதம் தெரிவித்துக் கடிதம் எழுதி வைத்து விடு. தபாலில் சேர்த்து விடுகிறேன்.'' — நான் அவரைப் பார்த்தேன்.

என் முகத்துக்கு மிக அருகில் அவர் முகம் வந்தது. அவர் கரு விழிகளில் என் முகம் பளபளத்தது:

''அத்தனை பேர்களுக்கும் இனிக்கும் இன்முகத்துடன் விருந்துகள் படைத்தாய்;

'நான் என்ன இந்த வீட்டின் சமையற் காரியா?' என்று கேட்டுவிட எத்தனை நேரமாகும் உனக்கு? நீ அப்படிக்கேட்கவில்லை! காரணம் உன்னைச் சமையற்காரியாக எண்ணாமல் குடும்பத் தலைவியாக, பொறுப்புள்ள நிர்வாகியாக நினைத்து உயர்ந்தாய். அன்று என் நண்பர்கள் என்னைக் கேலி செய்த போது என்னை நானே வேலைக்காரனாக எண்ணித் தாழ்த்திக் கொண்டேன். உண்மைக் கௌரவம் அதிகாரத்தில் இல்லை. அன்பில் இருக்கிறது: கடமையில் இருக்கிறது. நீ எனக்காக, இந்தக் குடும்பத்துக்காக, நம் குழந்தைக்காகத் தான் வாழ்கிறாய்! ஆனால் தன்னை மறந்து பாடும் அந்தச் சிலமணி நேரங்களில் உனக்காக வாழ்கிறாய்! ஆம், உன் இன்பத்துக்காக வாழ்கிறாய்! அந்த அமைதியை, இன்பத்தை, உன் நிம்மதியைத் தடுக்க எனக்கு உரிமை இல்லை!'' — உணர்ச்சியோடு பொழிந்து தள்ளினார் அவர்:

அவர் கரங்கள் என் கரங்களுடன் இணைந்தன. சூடான வெம்மை நீர் அதில் தெறித்தது. நானும் என் கண்களை மூடிக் கொண்டேன். அவர் கண்ணீரின் துணையாக என் கண்களும் நீரை உகுத்தன. இரண்டு வெம்மை நீர்களும் ஒன்றாகக் கலந்து ஓடியபோது நாங்கள் ஒருவர் மற்றவருக்காகத் 'துணை' நின்றோம்.



## தொழில் நுட்பம்

அலுத்துக் கொண்டவர்: டாக்ஸி டிரைவர்
ஆறுதல் அளித்தவள்: டாக்ஸி டிரைவரின்
தகவல்: ஒரு டாக்ஸி அபிமானி

### டிமிக்கியோபாயம்!

"படா பேஜாரு புடிச்ச பொழைப்பும்மே, படா பேஜாரு புடிச்ச பொழைப்பு! படாவதிப் பயலுங்க மயிலாப்பூர் லஸ் கார்னரிலிருந்து அகில இந்திய ரேடியோ ஸ்டேஷனுக்கு நடந்து போகக் கூடாது? அட, அப்படித்தான் நடந்து போக முடியலேன்னு வெச்சுக்கோ! ரிக்ஷாவிலே போறது, ஜட்காவிலே போறது? அதை விட்டுட்டு, 'ஏ டாக்ஸி, ஏ டாக்ஸி!'ன்னு என்னை வெரட்டிக்கிட்டு வரானுங்க. 'எங்கே போகணும்?'னு கேட்டா 'ஆல் இந்தியா ரேடியோவுக்கு'ங்கிறானுங்க; இதென்னடா, அறுபது பைசா கிராக்கியா யிருக்கேன்னு 'வராது'ன்னு சொன்னால் உடனே நம்பரை நோட் பண்ணிக்கிட்டுப் போய்ப் போலிஸ் ஸ்டேஷன்லேரிப்போர்ட்பண்ணிப்பிடறானுங்க! நீயே சொல்லும்மே, அறுபது பைசாவுக்கு டாக்ஸி ஓட்டினா எனக்கும் ரிக்ஷாக்காரனுக்கும் இன்னும்மே வித்தியாசம்? இல்லே, கேட்கிறேன்! எந்தத் தொழிலைச் செய்தாலும் அந்தத் தொழிலிலே ஒரு கௌரவம் இருக்க வேணும்?''

''சும்மா ஏன் கத்தறீங்க? தப்பு உங்க மேலே தான்! எவன் எங்கே கூப்பிட்டா இன்னா, நீங்க ஏன் வராதுன்னு சொல்லணும்? கூப்பிடறவன் 'அறுபது பைசா ஆசாமின்னு தெரிஞ்சுக்கிறீங்களா, சட்டுன்னு பெட்ரோல் இருக்கான்னு பார்க்கிறாப் போலக் குனிஞ்சி ஒரு பார்வை பாருங்க; பார்த்ததும் அவன் அதைப் பார்க்கிறதுக்கு இடம் கொடாமல் வண்டியை நகர்த்திக்கிட்டே 'இங்கேயே கொஞ்ச நேரம் நிக்கிறீங்களா, பெட்ரோல் போட்டுக்கிட்டு வந்துடறேன்'னு அடக்கமே உருவாகச் சொல்லுங்க; 'எவ்வளவு நேரமாகும்'னு கேட்பான். 'அப்படி ஒண்ணும் நேரமாகாதுங்க! கம்பெனிக்குப் போய்க் கூப்பன் வாங்கிக்கிட்டு, அந்தக் கூப்பனைக் கொண்டு போய்ப் பங்கிலே கொடுத்துப் பெட்ரோல் போட்டுக்கிட்டு இதோ ரெண்டு மணி நேரத்திலே வந்துட மாட்டேன்?'னு சொல்லிவிட்டு நீங்க பாட்டுக்கு நழுவினா, அவன் பாட்டுக்குத் தான் சொல்லாம நழுவறான்!''

?



# 1964-65
# போனஸ் ஆண்டு!

எல்.ஐ.சியின் ஐந்தாவது மதிப்பீடு 1965 மார்ச் 31-ந் தேதி முடிய செய்யப்படும். மதிப்பீட்டுத் தேதியில், முழுக் காப்புத் தொகைக்கு (Full Sum Assured) அமுலிலிருக்கும் இலாபத்துடன்கூடிய பாலிசிகள் அனைத்தும் இலாபத்தில் பங்கு பெற உரிமையுள்ளவை ஆகும்

1963 மார்ச் 31 தேதி முடிய செய்யப்பட்ட நான்காவது மதிப்பீடு வெளிப்படுத்திய அதிகப்படி போனசு விதங்களாவன :

| முழு ஆயுள் அஷ்யூரன்ஸ்: | என்டௌமென்ட் |
|---|---|
| ரூ. 17.50 ஆயிரத்திற்கு ஆண்டிற்கு | அஷ்யூரன்ஸ்: ரூ. 14.00 ஆயிரத்திற்கு ஆண்டிற்கு |

உங்கள் நன்மையைக் கருதி, 1965 மார்ச் 31-ந் தேதியன்று உங்கள் பாலிசி முழுக் காப்புத் தொகைக்கு அமுலிலிருக்கும்படி பார்த்துக் கொள்ளுங்கள். 1965 மார்ச் 31-ந் தேதியன்றோ அல்லது அதற்கு முன்போ இலாபத்துடன் கூடிய பாலிசி ஒன்றினை எடுப்பதும் நன்மை பயக்கும். ஏனெனில், நீங்கள் எடுக்கும் புதிய பாலிசி ஈராண்டு போனசைப் பெற உரிமை பெறும்.

**நீங்கள் இன்ஷ்யூர் செய்யும் நன்னுளே**
**நீங்கள் பாதுகாப்புப் பெறும் பொன்னுளாகும்.**

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**



# கணித மேதை

ஜெயம்



எந்தவே கடினமான கணக்காயிருந்தாலும் நாராயணன் ஒரு நொடியில் போட்டுவிடுவான். சக மாணவர்களுக்கெல்லாம் அவனைக் கண்டாலே பயம்! சினிமா, நாடகம், சர்க்கஸ், நடனம் முதலிய எந்த விதமான கேளிக்கையானாலும் நாராயணனிடம் ஈர்க்கக் காட்ட முடியாது. அவனைப் பொறுத்தவரையில் எல்லாமே கணக்குத்தான்.

காலம் செல்லச் செல்ல நாராயணனின் கணித ஞானம் வளர்ந்து கொண்டே வந்தது. அதே சமயத்தில் உலக ஞானம் மறைந்து கொண்டே வந்தது. கிராமத்தில் ஆரம்பப் படிப்பு முடித்ததும், உயர்நிலைப் படிப்பு முடிந்து சென்னைக்குப் போய் ஒரு கல்லூரியில் சேர்ந்தான். அவனிடமிருந்த அபாரமான கணித ஞானம் கல்லூரியில் மிகவும் சுலபமாக யாருடைய சிபாரிசும் இல்லாமலே இடம் பிடித்துக் கொடுத்தது. கல்லூரியில் சேர்ந்த பிறகும் நாராயணனின் சுபாவம் துளிக்கூட மாறவில்லை. யாருடனும் சேராத தனி மனிதனாகவே திகழ்ந்தான்.

நாராயணனின் தகப்பனார் சின்ன வயதிலேயே காலமாகி விட்டார். தாயார் மட்டும்தான் இருந்தாள். நாராயணனைப் படிக்க வைத்து முன்னுக்குக் கொண்டு வரும் பொறுப்பை அவன் மாமா ஏற்றுக் கொண்டார். அவர் ஒரு மிராசுதார். நாராயணனின் படிப்பை அவர் அக்கறையாகக் கவனித்ததற்குக் காரணம் அவருடைய பெண் புவனேசுவரிதான். முதல் மூன்று பெண்களுக்கும் மணம் முடித்து விட்டார். நாலாவது பெண்ணான புவனேசுவரியை நாராயணனுக்குக் கொடுத்துவிட்டால் அவர் பிரச்னை தீர்ந்தது. வெளியில் வரன் பார்க்க அவருக்கு வசதியில்லை.

சின்ன வயதில் நாராயணன் புவனேசுவரியிடம் மிகவும் பிரியமாய்த்தான் இருந்தான். ஆனால் வர வர அந்தப் பிரியம் குறைய ஆரம்பித்தது. காரணம் கணக்கில் தன்னை மிஞ்சி யாரும் இல்லை என்ற எண்ணம் நாராயணனின் மனத்தில் வளர்ந்து கொண்டே வந்ததுதான். உயர்நிலைப் படிப்பு முடிவதற்குள்ளாகவே புவனேசுவரியை அலட்சியமாகப் பேச ஆரம்பித்தான். அவள் கணக்கில் மக்கு என்பது மட்டுமல்ல. முதல் படிவத்தோடு அவள் படிப்பு நின்றுவிட்டது. ஆனால் அவள் மிகவும் புத்திசாலி; ரசிகத்தன்மை உள்ளவள். நிறையத் தமிழ்ப் பத்திரிகைகளைப் படித்தும், கதா காலக்ஷேபங்கள் கேட்டும் அறிவை வளர்த்துக் கொண்டிருந்தாள். அத்துடன் நாராயணனுக்கு நேர்மாறான குணமுள்ளவள். எல்லாருடனும் மிகவும் சரளமாகப் பழகுவாள். சாதுரியமாகப் பேசுவாள். இவ்வளவெல்லாம் இருந்தும், நாராயணன் அவளை மக்கு என்றே அழைக்கலானான். இதைக் கண்ட அவன் மாமாவுக்குக் கவலை பிடித்துக் கொண்டது. தம் பெண்ணுக்கு வேறு வரன் பார்க்க வேண்டியதுதான் என்ற முடிவுக்கு வந்தார். இந்தச் சமயத்தில்தான் ஓர் அதிசயம் நிகழ்ந்தது.

மாமாவின் பெண் 'மக்கு புவனேசுவரி'யை மணந்துகொள்ள நாராயணன் மனப்பூர்வமாகச் சம்மதித்துவிட்டான்.

கல்லூரி முதல் ஆண்டுப் பரீட்சை எழுதி விட்ட பெருமிதத்துடன் நாராயணன் கிராமத்துக்கு வந்திருந்தான். யாரைக் கண்டாலும் ஏதாவது குயுக்தியான ஒரு கணக்கைப் போடுவான். அதைப் போட முடியாமல் விழிப்பவர்களைப் பார்த்துக் கைகொட்டிச் சிரித்து மகிழ்வான்.

புவனேசுவரி அவனிடம் வந்து, "நான் ஒரு கணக்குச் சொல்கிறேன், அதை நீங்கள் சரியாகப் போட்டு விடுங்கள், பார்க்கலாம்!" என்றாள்.

நாராயணன், "ஹஹ்ஹஹ்ஹா!" என்று சிரித்து விட்டு, "என்ன, நீயா, எனக்கா, கணக்குப் போடுகிறாய்? ரொம்ப ஒழுங்குதான் போ!" என்றவன் பிறகு, அந்த மக்குப் பெண் என்ன கணக்குப் போடுகிறது பார்க்கலாம் என்று தோன்றவே, "சரி கணக்கைச் சொல்லு....!" என்றான் அலட்சியமாக.

புவனேசுவரி ஆரம்பித்தாள்: "என்னிடம் ஒரு ரூபாய் இருக்கிறது. உங்களிடம் ஒரு ரூபாய் இருக்கிறது. ஒருவருக்கொருவர் ரூபாய்களை மாற்றிக் கொண்டோமானால் ஆளுக்கு ஒரு ரூபாய் வீதம் இருக்கும். இல்லையா? இது சரியான விடைதானே?"

"ஆமாம்....! இது என்ன அசட்டுக் கணக்கு?" என்று பெரிதாகச் சிரித்தான் நாராயணன்.

"தயவுசெய்து பரிகாசம் பண்ணாமல் கேளுங்கள். என்னிடம் ஒரு கருத்து இருக்கிறது; உங்களிடமும் ஒரு கருத்து இருக்கிறது. பரஸ்பரம் இருவரும் கருத்துக்களைப் பரிவர்த்தனை செய்து கொண்டால் ஆளுக்கு இரண்டு கருத்துக்கள் கிடைத்து விடுகின்றன. இல்லையா?"

கணித மேதை நாராயணன் இந்த முரண்பாட்டைக் கணித ரீதியாகவே தீர்த்து விடப் பல நாட்களாக முயன்றும் தோல்விதான். ஆனால் தன்னை மடக்கி விட்ட புவனேசுவரியை மணந்து கொள்வதில் மட்டும் நாராயணன் உள்ளத்தில் எந்தவித முரண்பாடும் குறுக்கிடவில்லை. கல்யாணம் 'ஜாம் ஜாம்' என்று நடந்தது.

Printed & Published by R Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

